KALKI 20.7.86 ரூ. 1.50

# கல்கி

# ஆறு வயதுச் சிறுவனா நக்ஸலைட்?

## எம்.ஜி.ஆர். முதல் மோகன் வரை!



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்த்திடத் தேவையில்லை.



## காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு

B84. GLC. 120 Tm



# ஐயா, ஒரு விண்ணப்பம்!

ஐயா,

உங்கள் அத்தனை பேருக்கும் இந்தக் கிராமத்துப் பெண்ணாகிய எனது பணிவான விண்ணப்பம்.

இது கம்ப்யூட்டர் யுகம் என்கிறீர்கள்; விம்பிள்டன் ஆட்டத்தை இங்கிருந்தே பார்த்து ரசிக்கும் சாட்டிலைட்டுகளின் காலம் என்கிறீர்கள். இருபத்தோராம் நூற்றாண்டுக்குப் போகப் போகிறோம் என்கிறீர்கள். உங்களின் இந்தப் பேச்சைக் கேட்கும்போதெல்லாம் எனக்கும் சந்தோஷமாகத்தான் இருக்கிறது.

ஆனால், எங்களூரான கொளகம்பட்டியிலிருந்து ஆறு கி. மீ. தொலைவிலிருக்கும் அரூருக்குச் செல்வதற்கே நாங்கள் அல்லாடித் தவிக்கும் போதும், டவுன் பஸ் போன்ற எந்தவிதமான போக்குவரத்து வசதியும் இல்லாததால், எங்கள் கிராமத்துக் குழந்தைகளும், பக்கத்திலுள்ள கிராமங்களில் வசிக்கும் குழந்தைகளும் அரூரிலிருக்கும் உயர்நிலைப் பள்ளிக்குத் தினந்தோறும் நடந்து சென்றுதான் படித்து வர வேண்டும் என்கிற பரிதாப நிலையைப் பார்க்கும் போதும் நெஞ்சில் ஏதோ ஒன்று நெருடுகிறது. இந்த நடைக்குப் பயந்து கொண்டே பல குழந்தைகள் உள்ளூரிலிருக்கும் துவக்கப் பள்ளியோடு தங்கள் படிப்புக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கும் அவல நிலையைக் கண்ணுறும் போது, இருபத்தோராம் நூற்றாண்டு, அதற்கு மக்களைத் தயார்ப்படுத்துவதற்கான புதிய கல்வித் திட்டம் என்றெல்லாம் பேசுவது வெறும் ஹம்பக்கோ என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

ஐயா, நான் இப்படிச் சொல்வதற்காகத் தயவு செய்து யாரும் என் மீது கோபப்பட வேண்டாம். படிக்க வேண்டும் என்ற ஆசையில் கொளகம்பட்டிக்கும் அரூருக்குமாகத் தினந்தோறும் நான் பன்னிரண்டு கி. மீட்டர்கள் நடந்ததன் வேதனைதான் இது. நானெல்லாம் பிறப்பதற்குப் பல்லாண்டு காலத்திற்கு முன்பிருந்தே மனுமேல் மனுவாகப் போட்டுப் போட்டும் எங்களூருக்கு எந்தவித வசதியும் செய்யப்படாததன் ஆதங்கம்தான் இது. வேறொன்றுமில்லை.

இப்படிக்கு,

கோ. மாதேஸ்வரி

கொளகம்பட்டி.

# ஆறு வயதுச் சிறுவன் நக்ஸலைட்?

பெரியண்ண செட்டி வழக்கம் போல வீட்டில் உட்கார்ந்து கொண்டு வட்டிக் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று நான்கைந்து பேர் உள்ளே நுழைந்து, பெரியண்ண செட்டியை வளைத்துக் கொண்டார்கள். அவர்களுடைய கைகளில் ஆயுதங்கள். பெரியண்ண செட்டி அதிர்ச்சியடைந்து போய் அப்படியே உட்கார்ந்திருக்க, வீட்டிலிருந்த பெண்கள் 'ஐயோ முறையோ' என்று அழ ஆரம்பித்தார்கள்.

"பெண்களே! நீங்கள் இப்போதுதான் அழுகிறீர்கள். ஆனால் இவரிடம் வட்டி கட்டிக் கட்டியே மீள முடியாமல் தத்தளித்துக் கொண்டிருக்கும் எத்தனை குடும்பத்துப் பெண்கள் ஓயாமல் அழுது கொண்டிருக்கிறார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். அவர்களுடைய அழுகையை நிறுத்த வேண்டாமா? அதற்காகத்தான்



• நாய்க்கன் கொட்டாய் கிராமம்.



• லெனின், ஸ்டாலின் ஆகியோரின் மத்தியில் பாலன் படம்.

வந்திருக்கிறோம். உங்களை நாங்கள் எதுவும் செய்யப் போவதில்லை. எங்கள் இலக்கு பெரியண்ணா செட்டி மட்டும்தான். ஆகையால் பெண்களே, நீங்களெல்லாம் சற்று ஓரமாகவே இருங்கள்!'' என்றான் வந்தவர்களில் ஒருவன்.

இப்படியொரு நீண்ட வசனத்தைக் கேட்ட பெண்களெல்லாம் ஸ்தம்பித்துப் போய் நிற்க, வந்தவர்கள் மிகச் சுலபமாகப் பெரியண்ணா செட்டியைக் கொலை செய்தார்கள். வீடு முழுவதையும் சோதனையிட்டு வட்டிக்குக் கொடுத்த பத்திரங்களைத் தேடிப் பிடித்துக் கிழித்தெறிந்தார்கள்; தீயிட்டுக் கொளுத்தினார்கள். சில துண்டுப் பிரசுரங்களைப் போட்டுவிட்டுத் தப்பித்துச் சென்றார்கள்.

இதுதான் தருமபுரி மாவட்டத்தில் நக்ஸல்பாரிகள் நடத்திய முதல் கொலை. இது நடந்தது 1973 ஆம் ஆண்டில். தாகரசம்பட்டி என்ற ஊரில். மேற்கு வங்கத்தின் எங்கோ ஒரு மூலையிலிருக்கும் நக்ஸல்பாரிக் கிராமங்களில் பரவிக் கொண்டிருந்த நக்ஸல்பாரி இயக்கத்தின் வீச்சு தருமபுரி மாவட்டம் வரை நீண்டு விட்டது என்பதைக் காட்டிக் கொடுத்தது இந்தக் கொலைதான். இதன் பிறகுதான் போலீஸ் சுறுசுறுப்பானது. இந்தக் கொலைக்குக் காரணமான பாலன் என்ற இளைஞரையும் மற்ற கூட்டாளிகளையும் கைது செய்து சிறையிலடைத்தது.

தருமபுரியிலுள்ள ஒரு சாதாரண நடுத்தரக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்த பாலனுக்கு எப்படி இப்படியோர் எண்ணம் ஏற்பட்டது? அவர் சென்னையிலுள்ள பச்சையப்பன் கல்லூரியில் எம். எஸ் ஸி. படித்துக் கொண்டிருந்த போது, எல்லா நடுத்தரக் குடும்பங்களிலுள்ள பிரச்னைகளும் கஷ்டங்களும் அவருக்கும் இருந்தன. அப்போதுதான் மேற்கு வங்கத்தில் நக்ஸல்பாரி இயக்கத்திற்கு வித்திட்ட சாருமஜூம்தார் சென்னை வந்திருந்தார். அவரைச் சந்தித்தார் பாலன். 'கஷ்டப்படும் மக்களுக்கு ஓர் ஆயுதப் புரட்சியினாலன்றி வேறு எதிலும் மீட்சி கிடைக்காது' என்று உபதேசித்தார் சாருமஜூம்தார். அதில் மயங்கிய பாலன், தனது படிப்பையும் பாதியில் விட்டுவிட்டுச் செயல்பட ஆரம்பித்தார். அந்தச் செயல்பாட்டின் முதல் பலிதான் பெரியண்ணா செட்டி.

பெரியண்ணா செட்டி கொலை வழக்கில் கைது செய்யப்பட்ட பாலன் தனது தண்டனைக் காலம் முடிந்து கடந்த 78 இல் வெளியே வந்தபோது, தனது இயக்கத்தின் சித்தாந்தத்தை மறுபரிசீலனை செய்ய வேண்டியதாயிற்று. காரணம், தனது இயக்கம் பெரியண்ணா செட்டியைக் கொலை செய்த பிறகும் வட்டிக் கடைகள் ஏதும் ஒழிந்து போய்விடவில்லை. மாறாக அவை வளர்ந்து கொண்டிருப்பதையே கண்டார். ஆகவே, 'தனி மனிதக் கொலைகளால் ஒரு புரட்சி நடந்துவிட முடியாது. இந்தச் சமூக அமைப்பின் மேல் மக்களுக்கு ஏற்படும் அதிருப்தியால் மட்டுமேதான் ஓர் ஒட்டுமொத்தப் புரட்சியை வெற்றிகரமாக நடத்த முடியும். எனவே, ஓர் இயக்கத்தின் வேலை இந்தச் சமூக அமைப்பிலுள்ள கோளாறுகளை மக்களுக்கு எடுத்துச் சொல்வது மட்டும்தான்' என்று தனது இயக்கத்தின் கொள்கையையே மாற்றிக் கொண்டார் பாலன்.

ஆனாலும் போலீஸார் பாலனை விட்டு விடவில்லை. மீண்டும் மீண்டும் பல்வேறு வழக்குகளில் தொடர்புபடுத்தி பாலனைக் கைது செய்தனர். இப்படிக் கைது செய்யப்பட்டுப் போலீஸ் காவலில் இருந்தபோது கடந்த 80 ஆம் ஆண்டு செப்டம்பர் 12 ஆம் தேதி பாலன் இறந்துவிட்டார். அது அவருடைய இயக்கத் தோழர்களுக்குப் பெரும் அதிர்ச்சியளித்தது. 'பாலனின் மரணம் இயற்கையானதல்ல; போலீஸாரின் கொடுமை தாங்க முடியாமல்தான் அவர் இறந்திருக்கிறார்' என்ற எண்ணம் ஏற்படுத்திய கோபம் மேலும் பல படித்த இளைஞர்களையும் பெண்களையும் பாலன் ஏற்படுத்திய 'புரட்சிகர இளைஞர் முன்னணி (RYL)' என்ற அமைப்பில் சேரத் தூண்டிவிட்டு விட்டது.



* நாயக்கன்கொட்டாயிலுள்ள அப்பு,பாலன்சிலைகள்

தருமபுரி மாவட்டத்திலுள்ள பல்வேறு இடங்களைத் தலைமையிடமாகக் கொண்டு பல்வேறு பிரிவு நக்ஸல்பாரி இயக்கங்கள் செயல்பட்டுக்கொண்டிருந்தாலும், தருமபுரிக்கு அருகிலுள்ள நாய்க்கன் கொட்டாய் என்னும் கிராமத்தைத் தலைமையிடமாகக் கொண்டு இயங்கி வரும் ஆர். ஒய். எல்.தான் முக்கியமான இயக்கம் என்பதால் அங்கு சென்றோம். சில நக்ஸல்பாரிகளோடு பேசினோம். அவர்களும் தங்கள் பெயர்களை வெளியிடாமல் பேட்டியை மட்டும் வெளியிடுவதானால் சரி என்ற நிபந்தனையுடன் பேச ஆரம்பித்தார்கள்.

''இப்போது உங்கள் இயக்கத்தின் நிலை எப்படியிருக்கிறது?''

''கொஞ்சம் ஸ்தம்பித்துப் போயிருக்கிறது என்பதுதான் உண்மை!''

''காரணம்?''

''போலீஸாரின் கொடுமையான அடக்கு முறைதான்.''

''ஆரம்பத்தில் தலைமறைவாக இயங்கிக் கொண்டிருந்த உங்கள் இயக்கம் இப்போது வெளிப்படையாகவே இயங்கிக் கொண்டிருக்கிறது. நீங்களும் உங்கள் இயக்கத்தின் தலைவர் பாலனுக்குச் சிலை அமைத்திருக்கிறீர்கள். ஊர்வலம் போயிருக்கிறீர்கள். பொதுக் கூட்டம் போட்டிருக்கிறீர்கள். நிலைமை இப்படியிருக்கும்போது பின் எப்படிப் போலீஸாரின் கொடுமையான அடக்குமுறை என்கிறீர்கள்? மக்களின் ஆதரவு இல்லாததுதான் உங்கள் இயக்கத்தின் ஸ்தம்பித்த நிலைக்குக் காரணம் என்று நாங்கள் சொல்லலாமா?''

''நீங்கள் சொல்வது தவறு தோழரே! மக்களின் ஆதரவு எங்களுக்கு அதிகரித்துக் கொண்டேதான் இருக்கிறது. இன்னும் சொல்லப் போனால் இளம் பெண்கள் கூட எங்கள் இயக்கத்தில் இப்போது சேர ஆரம்பித்திருக்கிறார்கள். அந்த அளவுக்கு இயக்கம் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது. இருந்தும் நாங்கள் ஸ்தம்பித்துப் போயிருக்கிறோம் என்றால், காரணம் போலீஸாரின் பொய் வழக்குகள்தான். எங்களுக்காகவாதாட முன் வரும் வக்கீல்களைக்கூட அவர்கள் கொடுமைப் படுத்துகிறார்கள் என்றால் நாங்கள் என்ன செய்வது?''

''அப்படியானால் நீங்கள் குற்றமே செய்யவில்லை என்கிறீர்களா?''

''நாங்கள் — அதாவது எங்கள் இயக்கம் தனி மனிதக் கொலைகளில் நம்பிக்கை வைத்திருந்தபோது எங்கள் இயக்கத்தால் செய்யப்பட்ட பெரியண்ண செட்டி கொலையை நாங்கள் மறுக்கவேயில்லை. ஆனால் அதன் பிறகு நடந்த சில கொலைகளுக்கும், கொள்ளைகளுக்கும் எங்கள் இயக்கம் பொறுப்பல்ல. காரணம், தனி மனிதக் கொலைகள் என்ற எங்கள் கொள்கையையே நாங்கள் மாற்றிக் கொண்டுவிட்டோம். இந்தச் சமூக அமைப்பிலுள்ள குளறுபடிகளை எடுத்துச் சொல்லி மக்களுக்கு விழிப்புணர்ச்சியூட்டுவதுதான் எங்கள் இயக்கத்தின் தெளிவான கொள்கையாக வரையறுத்துக் கொண்டிருக்கிறோம். கொள்ளைகளிலும் எங்களுக்குச் சம்பந்தமில்லை. கடந்த 17.3.86 அன்று வி. கொல்லப்பாடி என்னும் ஊரிலுள்ள பூதால் கவுண்டர் என்பவர் வீட்டில் யாரோ சில சமூக விரோதிகள் நடத்திய கொள்ளையில் கூட எங்கள் இயக்கத்தின் முக்கியமான பொறுப்புகளை வகிக்கும் தோழர்கள் சித்தானந்தம், பச்சையப்பன், செல்லப்பன் ஆகியோரைத் தொடர்புபடுத்தி வழக்குப் பதிவு செய்திருக்கிறார்கள். இதெல்லாம் கொடுமையில்லையா?''

''அவர்களுக்கும் இந்தக் கொள்ளைக்கும் சம்பந்தமில்லையென்றால் அவர்கள் இப்போது தலைமறைவாக இருக்க வேண்டிய அவசியமென்ன? நீதிமன்றங்களில் உண்மையை நிரூபிக்க வேண்டியதுதானே?''

''சாதாரணமாக ஜாமீன் கொடுக்கப்பட

---

# மாதம் ஒரு மாவட்டம்



**நினைவிருக்கிறதா?**

**கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் ஏழாவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது உங்கள் தென்னாற்காடு மாவட்டம்தான் என்பது! எனவே, உங்கள் மாவட்டத்திலுள்ள குறைகளும் அநீதிகளும் முறையீடுகளும் தவிர பெரும் சாதனைகள் பற்றிய கடிதங்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.7.86.**

**உடனடியாக எழுதி அனுப்புங்கள்!**

**— ஆசிரியர்**

பி.கு.: இப்போது நமது பிரதிநிதிகள் அந்த மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சேகரிக்கும் பரபரப்பான செய்திக் கட்டுரைகளும், படங்களும் ஆகஸ்டு 17, 24 தேதியிட்ட கல்கி இதழ்களில் பிரசுரமாகும்.

# ∴பாரெக்ஸ்®
# முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ∴பாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக்கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கியதாகும் ∴பாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கியமாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-∴பாஸ்∴பரஸ் அடங்கியதாகும் ∴பாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ∴பாரெக்ஸ் கலப்பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புதிய மேம்பட்ட **∴பாரெக்ஸ்®**

CLARION/B/GX/13/203 TMA

வேண்டிய. வழக்குகளில் கூட எங்கள் இயக்கத் தோழர்களுக்கு ஜாமீன் மறுக்கப் படுகிறபோது இந்த நீதிமன்றங்களை நாங்கள் எப்படி நம்புவது? நாங்கள் மக்களின் எதிரி களல்ல என்பது மக்களுக்குத் தெரியும். அது போதும் எங்களுக்கு.

"ஓர் இயக்கத்தை நடத்துவதென்பது சாதாரண விஷயமல்ல. அதற்குக் கண்டிப் பாகப் பணம் தேவை. உங்களைப் போன்ற புரட்சிகரமான இயக்கங்களுக்கும் பணம் தேவை. அதை எங்கிருந்து பெறுகிறீர்கள்?"

"மக்களிடமிருந்துதான் பெறுகிறோம். அதுவும் சாதாரண மக்கள் ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் என்று கொடுக்கும் பணத் தைத்தான் நம்பியிருக்கிறோம். பணக்காரர் கள் கொடுக்க முன்வந்தாலும் நாங்கள் வாங்கிக் கொள்வதில்லை. 70 இல் இறந்து விட்ட கோயம்புத்தூரைச் சேர்ந்த தோழர் அப்பு, தோழர் பாலன் ஆகியோரின் சிலை களை அமைக்க எங்களுக்கு 35,000 ரூபாய் செலவானது. அது முழுக்க முழுக்க உழைக் கும் மக்களிடமிருந்து பெறப்பட்ட பணம் தான். சிலவட்டிக்கடைக்காரர்கள் கொடுத்த நூறு ரூபாய்த் தாள்களையெல்லாம் நாங்கள் வாங்கிக் கொள்ளாமல் மறுத்திருக்கிறோம். அப்படியிருக்கும்போது நாங்கள் எப்படிக் கொள்ளையடிக்கத் துணிவோம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டாமா?

"இதுமட்டுமல்ல, இப்போது தலைமறை வாக இருக்கும் தோழர்கள் சித்தானந்தம், பச்சையப்பன், செல்லப்பன் ஆகியோரைக் கண்டுபிடிக்க முடியாத ஆத்திரத்தில் அவர் களின் வீடுகளில் புகுந்த போலீஸார் பொருள்களையெல்லாம் எப்படிச் சூறையாடி னார்களென்று தெரியுமா? அந்தப் பெண்களை எப்படியெல்லாம் பேசி அவமானப்படுத்தி னார்களென்று தெரியுமா? சரி, அதுதான் கிடக்கட்டும் விடுங்கள். தோழர் சித்தானந் தத்தின் மகன் சிறுவன் பாவேலுக்கு ஆறு வயது. அவன்மேல் எத்தனை கேஸ்கள்? பிச்சை எடுத்தானென்று ஒரு கேஸ். சட்டத் திற்கு முரணான முறையில் கூட்டம் கூட்டி னன் என்று ஒரு கேஸ். ஜனங்களைத் தடுத்து நிறுத்தி, அச்சுறுத்திப் பணம் பறித்தான் என்று மேலும் இரண்டு கேஸ்கள். ஆக, அவன்மேல் மொத்தம் நான்கு கேஸ்கள். ஓர் ஆறு வயதுச் சிறுவன் செய்யக் கூடிய காரியங்களா இவை? நீங்களே யோசித்துப் பாருங்கள்!" என்று அவர்கள் சொன்ன போது நமக்கு ஒரே அதிர்ச்சி!

நாம் அந்த நக்ஸல்பாரிகளுக்காகப் பரிந்து பேச வரவில்லை — அவர்களுடைய தவறான கொள்கைகளையும், செயல்களையும் நியாயப் படுத்தவும் வரவில்லை. ஆனாலும் ஓர் ஆறு வயதுச் சிறுவனின் மேல் அநியாயமாக நான்கு வழக்குகளைப் பதிவு செய்திருப்பதன் மூலம், மற்றும் குற்றவாளி என்று கருதப் படுகிறவரைப் பிடிக்க முடியாததால் அவரது குடும்பத்தினரைக் கொடுமைப்படுத்துவதன் மூலம் 'நூறு குற்றவாளிகள் தப்பிக்க நேர்ந் தாலும் ஒரு நிரபராதி தண்டிக்கப்பட்டுவிடக் கூடாது' என்ற சட்டங்களின் மிக உயரிய நோக்கத்தையே நமது போலீஸார் தூக்கி யெறிந்து விட்டார்கள் என்பதைச் சொல் லாமல் இருக்க முடியாது. பொதுவாகவே நமது போலீஸின் அணுகுமுறை இன்னமும் பிரிட்டிஷ் இந்தியா காலத்திய அணுகுமுறை யாகவே உள்ளது. காலத்துக்கு ஏற்ப இதை மாற்றிக் கொள்ள வேண்டியது அவசியம். இதைச் செய்யாததால் இன்னும் பல இளை ஞர்களின் மனத்தில் கோபமும் வெறுப்பும் தோன்றித் திசை மாறிப் போவதற்குப் போலீ ஸாரே காரணமாகிறார்கள்.

— இளங்கோவன்

# அடுத்த இதழில்...



* அமலாவின் துணிச்சலான பதில்கள்

— வித்தியாசமான ஒரு பேட்டி



* "கடவுள் ரொம்ப 'பிஸி'யாக இருக்கிறார்"

— நெஞ்சை உருக்கும் உண்மைக் கதை

சத்யராஜ் முரடர். 'ம்' என்றால் அரிவாளை எடுத்துக் கொண்டு எதிராளியின் கையைக் காலைச் சீவி விடுவார். அப்படியாப்பட்ட சத்யராஜுக்கு நைந்து போன ஓர் அம்மா. அந்த அம்மா ஸ்கூலில் வேலை பார்க்க, அந்த ஸ்கூலுக்குப் புதிதாய் வந்து சேரும் டீச்சர் தைரியமாய் சத்யராஜின் வீண் வம்புகளை எதிர்க் கேள்வி கேட்க, கடலோரக் கவிதைக்குப் பிள்ளையார் சுழி.

எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் என்கிற வெறியில் வேட்டி கட்டிய ஆறடி சத்யராஜ் மற்ற வாண்டுகளோடு வகுப்பறையில் உட்கார்ந்து அடம் பிடிக்கும் காட்சிகளில் கொஞ்சம் — கொஞ்சமே கொஞ்சம் — ஹாஸ்யக் கவிதை.



# கடலோரக் கவிதைகள்

அப்புறம் சீரியஸ் கவிதை. ஊருக்கு வந்த டீச்சரின் பின்னே, இன்னது என்று சொல்ல முடியாத உணர்வோடு அடிமை ஆட்டுக் குட்டியாகிறார் சத்யராஜ். (அவருடைய ஆகிருதி இந்தக் காட்சிகளில் கொஞ்சம் அவஸ்தை.) 'குரு தட்சணை என்ன?' என்று கேட்கும் டீச்சருக்காக, சமுத்திரத்தில் மூழ்கி வலம்புரிச் சங்கை எடுத்து வந்து ஆரவாரமாய் நீட்டுகிறாரே, அந்த இடம் சுவாரஸ்யம். அந்தச் சங்குக்கும் மூச்சுண்டு என்று அவர் விளக்குவது க்ளைமாக்ஸில் காட்சியை நகர்த்த கைகொடுக்கிறது.

இன்னது என்று புரியாத உணர்வாய் இருக்கும்வரை காரெக்டரும், கதையும் ஒழுங்காய்ச் செல்கிறது. காதலோ என்ற சாயம் தோய்த்துப் பார்க்க ஆரம்பித்தவுடன், சம்பிரதாயமான இடையூறுகள். டீச்சரின் அப்பா, பணக்கார இளைஞனை நாட, சத்யராஜின் முறைப் பெண் அவர் பின்னே சுற்ற.... இணை கோடுகளாய்ச் சில பாத்திரங்கள். வழக்கமான பிரிவு.



டீச்சர் வாழ்ந்த வீட்டை இடிப்பவர்களிடம் சத்யராஜ் சண்டைக்குப் போகிறார்: 'என் தெய்வம் வாழ்ந்த எடம்டா அது. கோயில் மாதிரி....'. அப்படியென்றால் சத்யராஜுக்கு டீச்சரின் பேரில் இருப்பது அபிமானமா, மரியாதை கலந்த பணிவா, இல்லை, சராசரிக்கு மிஞ்சிய காதலா? காதலென்றால் இந்த வேண்டாத ஆர்ப்பாட்டங்களை விடுத்து, மென்மையான உணர்வுகளை அல்லவா பிரதானப்படுத்தியிருக்க வேண்டும்? வேண்டாம், இவ்வளவு ஆழமாய்க் கேள்விகள் கேட்டால், திரைக் கதை படுத்துவிடும்.

க்ளைமாக்ஸ். ஆஸ்பத்திரியில் அடிபட்ட சத்யராஜ். அவருக்கு அதிர்ச்சியே கூடாது என்று எச்சரிக்கும் டாக்டர். மௌனக் கண்ணீரோடு அவரைப் பார்த்துவிட்டு, ஆத்மார்த்த உணர்வுகளை அங்கேயே விட்டுவிட்டு, விலகும் டீச்சர். வந்ததின் சின்னமாய் அவர் விட்டுப் போகும் வலம்புரிச் சங்கு. சத்யராஜ், தட்டுத் தடுமாறி அவரைத் தேடிக் கொண்டு புறப்பட்டு, சர்ச்சின் பெரிய மணியை ஒலிக்கச் செய்து..... அந்தக் கடைசி நிமிடங்கள் மகா சினிமாத்தனம் என்றாலும் ஒன்ற முடிகிறது.

சத்யராஜின் கோப தாப ஆவேசங்களை வெந்நீரில் முக்கி எடுத்து, காதல், மென்மை, கொஞ்சம் கண்ணீர் என்று பல ரகச் சோப்புப் போட்டு பாரதி ராஜா சலவை பண்ண முயற்சி செய்திருக்கிறார். சத்யராஜ் அட்டகாசமாய் ஆட்சி செய்கிறார். ஆனாலும் ரிஸ்க் இல்லையோ என்றால், அது தெரியாமலா இறங்கியிருப்பார் பாரதி ராஜா?

ஜனகராஜ், ரஞ்சனி எட்ஸெட்ராக்களும் உண்டு.

அறிமுக ரேகாவிடம் அனுபவமான முகபாவங்கள். குட் ஷோ!

பழைய ட்யூன்களின் சாயம் தோய்ந்த இளையராஜாவின் பாடல்கள் இனிமை.

கண்ணனின் காமிரா ஃப்ரேம்களில் உயிர்.

கடலோரங்கள் கொள்ளை அழகு. கவிதையில்தான் முழுமை இல்லை.

— ஜெயமன்மதன்



# அசிங்கப் பட்டுப் போன

* பகலில் கூட கஸ்டமர்கள் போகும் காட்சி...

பூதாகாரமான பிரச்னை ஒன்று சிங்காரப் பேட்டையில் சந்தி சிரித்துக் கொண்டிருக்கிறது. இந்தப் பிரச்னையை உடனே தீர்த்து வைக்காவிட்டால், எதிர்காலத்தில் அந்தப் பகுதியில் உள்ளவர்களின் சந்ததிகளையும் பாதிக்கக் கூடிய மிகப் பெரும் அபாயம்! இன்றே களையாவிட்டால், நாளை அந்தப் பகுதி மக்கள் — குறிப்பாக முப்பது வயதுக்குட்பட்டவர்கள் நடைப்பிணங்களாகத்தான் உலவிக் கொண்டிருப்பார்கள்! நாங்கள் சொல்வது சிறிதும் மிகைப்படுத்தப்பட்டதல்ல. உலகின் புராதனத் தொழிலான விபசாரம்தான் இந்த ஊரில் பயங்கரமாக வளர்ந்து மக்களை நோயில் ஆழ்த்தி, வாட்டி வதைத்துக் கொண்டிருக்கிறது.

பாண்டிச்சேரி — பெங்களூர் தேசிய நெடுஞ்சாலையில் வட ஆர்க்காடு மாவட்டத்தை ஒட்டி இருக்கும் தருமபுரி மாவட்டத்தைச் சேர்ந்த இந்த ஊரில் இன்று இந்தத் தொழில்தான் ரொம்பப் பிரசித்தம். இரவு பகலாக லாரி ஓட்டும் டிரைவர்கள் 'ரெஸ்ட்' எடுத்துக் கொள்வது இங்கேதான்! கேள்வி கேட்பாரில்லை. ஊரிலுள்ள பெரிய மனிதர்களோ 'நமக்கேன் வம்பு' என்று ஒதுங்கிவிடுகிறார்கள்.



சிங்காரப்பேட்டைகூட்டு ரோட்டிலிருந்து ஒரு கி.மீ. தூரத்திற்குச் சாலையின் ஓரத்தில் குடிசைகளைப் போட்டுக் கொண்டு 'குடிசைத் தொழிலாக' இந்தத் தொழிலை நடத்தி வருகிறார்கள். இந்தப் பெண்களுடன் தொடர்பு கொள்ளும் மனிதர்கள் பால்வினை நோயை ரூபாய் கொடுத்து 'வாங்கிச்' செல்கிறார்கள்.

ஊரில் நிலைமை இப்படியிருக்கும்போது 'டாக்டர் எஸ். கருணாநிதி, வி. டி. ஸ்பெஷலிஸ்ட்'' என்ற போர்டை ஒரு மாடியில் பார்த்து நாங்கள் ஆச்சரியப்படவில்லை. இதே நிலை நீடித்தால் இன்னும் சில வருடங்களில் குறைந்தபட்சம் ஒரு டஜன்

---

* ஐவ்வாது மலையிலுள்ள கடப்பாறை ஆற்றில் ஒரு தடுப்பு அணை (Check Dam) கட்டினால், மழைக் காலத்தில் சிங்காரப்பேட்டை ஏரி வழிந்து போவதைத் தடுத்து, தண்ணீரில்லாமல் வறண்டு போகும் புளியானூர் ஏரிக்கும் தண்ணீர் கிடைக்க ஏற்பாடு செய்யலாம். இதனால் மேலும் பல நூறு ஏக்கர் பாசன வசதி பெறும்.
* சிங்காரப் பேட்டையில் ஒரு முறையான பஸ் ஸ்டாண்ட் கிடையாது. பஸ் ஸ்டாண்டுக்காக ஒதுக்கப்பட்ட நிலத்தைப் பலர் ஆக்கிரமிப்புச் செய்துள்ளனர். அதை அகற்றி பஸ் ஸ்டாண்ட் கட்டவேண்டும்.
* கட்டி முடித்து நான்கு வருடங்களாகியும் தாய் — சேய் நலவிடுதி மூடியே கிடக்கிறது.
* பிரிட்டிஷ் காலத்தில் கட்டப்பட்ட ஊராட்சிப் பஞ்சாயத்துச் சாவடி இப்போது கவனிப்பாரில்லாமல் பாழடைந்து கொண்டு வருகிறது.
* கோயில் நிலங்களைத் தனியார் ஆக்கிரமிப்புச் செய்தது மட்டுமில்லாமல், அந்த நிலங்களைத் தங்கள் சொந்த நிலங்களைப் போல், மற்றவர்களுக்கு விற்றுக் கொள்ளையடிக்கின்றனர்.

இப்படிப் பல பிரச்னைகள் சிங்காரப் பேட்டையை உலுக்கிக் கொண்டிருப்பதாக, சிங்காரப் பேட்டை ஒன்றிய அ. தி. மு. க. செயலாளர் கிருஷ்ணப்பாவும், ஜனதா தலைவர் ஷஃபியுல்லாவும் கூறுகின்றனர்.

# சிங்காரப் பேட்டை!

வி.டி. ஸ்டேஷனின் டுகளாவது இந்த ஊருக்குத் தேவைப்படுவார்கள்.

குறிப்பிட்ட அந்த ஒரு கி.மீ. நெடுக இந்தக் 'குடிசைத் தொழில்' மட்டுமின்றிச் சாராயக் கடை, கள்ளுக்கடை போன்றவைகளும் உள்ளன. அந்த வழியாகத்தான் சுமார் ஆயிரம்



• இந்தத் தெருவே 'அவர்கள்' தெருதான்.

கேட்டை அடியோடு ஒழித்து விட்டார். ஆனால் இன்று? போலீஸாரின் மூக்கின் நுனியிலேயே தொழில் ஜோராக நடந்து கொண்டிருக்கிறது. இப்போதெல்லாம் எந்தப் பெண்ணையாவது பிடித்துக் கொண்டு போனாலும் இரவு முழுவதும் 'வைத்துக் கொண்டு' காலை



• ஊர்ச் சாவடி



• கிருஷ்ணப்பா • ஷபீயுல்லா.

மாணவ, மாணவிகள் பள்ளிக்குச் சென்று திரும்ப வேண்டும். அந்த மாணவ — மாணவிகள் மனத்தில் இந்த விதி ஓரச் சாக்கடைகள் ஏற்படுத்தக் கூடிய பாதிப்புக்களை நினைத்தால் நெஞ்சு கொதிக்கிறது.

அதேசமயம் அந்த விலை மாதர்கள் கட்டியிருக்கும் அழுக்கான கிழிந்த சேலைகளையும் களையிழந்த முகங்களையும் பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது. சே... வயிற்றுப்பாட்டுக்காக இவர்கள் இந்தத் தொழிலைச் செய்தும் வறுமையின் பிடியிலிருந்து தப்ப முடியவில்லையே? பின் ஏன்தான் இந்தக் குப்பையில் விழுந்து உழல்கிறார்களோ என்று மனத்தைத் துயரம் கவ்வுகிறது. இவர்களும் வறுமையில் உழன்று பல குடும்பப் பெண்களின் வயிற்றெரிச்சலையும் கொட்டிக் கொள்கிறார்கள். பாவம்!

"ஐந்து வருடங்களுக்கு முன்னர் ராஜசிங்கம் என்றொரு சப் — இன்ஸ்பெக்டர் இருந்தார். உண்மையில் 'சிங்கம்' தான் ஸார் அவர்! அவர் இருக்கும்போது இந்த ஒழுக்கக்யில் விட்டு விடுகின்றனர். இவர்கள் யோக்கியதையைப் பார்த்தீர்களா?" என்று கேட்டார் சிங்காரப் பேட்டைப் பிரமுகர் ஒருவர். களங்கத்தைப் போக்க வேண்டிய காவல் துறையினர் தாங்களே களங்கப் பட்டுப் போவதை நினைத்தால் ஆத்திரம் பற்றிக் கொண்டு வருகிறது.

சுற்று வட்டாரத்தில் இருக்கும் மலைக் கிராம மக்கள் கூட தங்கள் வசமிழந்து இந்தக் குடிசைகளுக்குள் நுழைந்தார்கள். இன்று டாக்டர் கருணாநிதியின் கிளினிக்குக்கு வந்து சென்று கொண்டிருக்கிறார்கள்.

"மலை மீது ஏழு வயது பெண்ணுக்கும் மூன்று வயது ஆண் குழந்தைக்கும் கூடப் பால்வினை நோய் இருக்கிறது" என்று இந்த டாக்டர் கூறிய போது அதிர்ந்து போனோம். இதற்குக் காரணம் மலை கிராம ஆண்கள் சிங்காரப்பேட்டை சிங்காரிகளிடம் தொடர்பு கொண்டு விட்டுப் பிறகு தங்கள் மனைவியின் கருப்பையில் விஷ விதைகளைத் தூவுவதுதான். கணவனிடமிருந்து மனை

விக்கும் மனைவியிடமிருந்து கருவில் உள்ள குழந்தைக்கும் நோய் பரவுகிறது.

"தினசரி என்னிடம் நாற்பது கேஸ்கள் வருகின்றன. எல்லாம் முப்பது வயதுக்குட்பட்டவர்கள்தான். இதில் அறுபது சதவீதம் ஆண்கள். மீதி பெண்கள்" என்று கூறும் கருணாநிதி, "அரசு இங்குள்ள வேசிகளின் ரத்தத்தைப் பரிசோதித்துப் பார்த்தால் 'எய்ட்ஸ்' இருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை" என்று ஒரு போடு போட்டார். தங்கள் வேலைக்காரிக்கு என்று சொல்லி மாத்திரைகள் எழுதி வாங்கிக் கொண்டு போகும் பெரிய இடத்துப் பெண்களும் உண்டாம்!

இத்தனைக்கும் இந்தச் சிங்காரப்பேட்டையில் ஒரு கூடுதல் ஆரம்ப சுகாதார நிலையம் இருக்கிறது. இரண்டு எம். பி. பி. எஸ். டாக்டர்கள் இருக்கிறார்கள். ஆனால் கருணாநிதியிடம் செல்லும் நோயாளிகள் இந்த ஆ. சு. நிலையத்திற்கு வருவதில்லை. இங்கிருக்கும் டாக்டர்கள் சற்று முயற்சி எடுத்தால் வெட்கத்தின் காரணமாக வெளியே சொல்லாமல் நோயை அனுபவித்துக் கொண்டிருக்கும் நூற்றுக்கணக்கானவர்களுக்கு மெய்யான தொண்டாற்ற முடியும்.

தமிழக அரசை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறோம். சிங்காரப்பேட்டையில் நிலவி வரும் இந்தச் சீர்கேட்டை உடனே போக்குங்கள். உங்கள் மருத்துவப் படைகளை அனுப்புங்கள். பால்வினை நோயால் அவதிப்படும் இந்தப் பகுதி ஆண், பெண்களை மட்டுமல்ல; அப்பாவிக் குழந்தைகளையும் குணப்படுத்துங்கள். வறுமை வாட்டியதால் விபசாரத்தில் இறங்கி, அந்த வறுமையும் ஒழியாமல், மன, உடல், ஆரோக்கியத்தையும் இழந்து பரிதவிக்கும் அந்தப் பெண்களுக்குப் புனர் வாழ்வு அளியுங்கள். அவர்களுக்கு நோயிலிருந்து மட்டுமின்றி வறுமையிலிருந்தும் விடுதலை பெற்றுத் தர வேண்டும். கௌரவமான சுயவேலை வாய்ப்புக் கிடைக்கச் செய்து அவர்கள் மானுடர்களாக வாழ வகை செய்யுங்கள். அந்த வட்டாரத்தில் போலீஸை ஒரு உலுக்கு உலுக்கி சரிவரக் கடமையாற்றச் சொல்லுங்கள்!

இதையெல்லாம் செய்யாது போனால் சிங்காரப்பேட்டை அசிங்கமாவது இருக்கட்டும், தமிழக அரசே அசிங்கப்பட்டுப் போகும்!

— ப்ரியன்



# கிராமத்து நிர்மலமே, ஏன் மிரள்கிறாய்?

எங்கள் —
சந்தடி நகரங்களில்
வளைக்கரங்கள் வாகனம் ஓட்டும்!
விமானத்தின் விசை முடுக்கும்!
விண்வெளித் தேர்கள் கூட,
இவர்கள் கைபட்டுச் சீறிப் பாயும்!
அவ்வளவு ஏன்?
தேச ரதங்களையே கூடச்
சில தேவதைகள் வழிநடத்தும்!
கிராமத்து இளம் மலரே!
ஏன் மிரள்கிறாய்?
காமிராக் கண்ணின்
நொடித்துளிச் சிமிட்டல்
உன் ஆயுளைக் குறைத்துவிடுமா என்ன?
பெருமிதம் கொள்...
அச்சம் விடுத்து முகம் திருப்பு!
நிமிர்ந்து நில், சாட்டையைச் சொடுக்கு!
[illegible]!

— சுப்ர. பாலன்.

(தருமபுரி மாவட்டப் பயணத்தின் போது, புகைப்படக்காரரின் காமிராவைக் கண்டு வெட்கப்பட்டுக் கீழே குதித்தாள் இந்தப் பெண்... இவள் தந்த கவிதை இது!)

# கல்கி

ஆகஸ்டு 3 ஆண்டு மலர்

## பம்பாய்த் தமிழர் சிறப்பிதழ்

மினி தொடர்



## சுஜாதா

எழுதும் குறுநாவல்

# உயிர் ஆசை!

[illegible]

க்ரைம் த்ரில்லர் தொடர்

## பட்டுக்கோட்டை பிரபாகர்



ரூ 5000

## முதல் பரிசுக் கதை

அதிக பக்கங்கள்;
அதே விலை!





சமரச திட்டம் —
விளக்கங்கள்
இந்த போதி மரத்தின் கீழ் உட்கார்ந்து பேசிப் பாருங்க.. நல்லுறவு உண்டாகட்டும்!




பாரத நாட்டு நதி நீர்
சண்டை போடாமல் தண்ணீரை வீணாக்காமல் விட்டுக் கொடுத்து பகிர்ந்து கொள்ளுங்க!




கவலைப் படாதீங்க.. நான் சொல்றேன் வழி!.. அண்ட சராசர எம்.ஜி.ஆர் ரசிகர் மா மன்றம் ஆரம்பிச்சு நீங்க கொள்கை பரபரப்புச் செயலாளராகி புர்ச்சித் தலைவருக்கு விழா கொண்டாடி 10 அடி உயரத்துல 6 லட்சம் செலவில் தங்கச் செங்கோல் கொடுத்துடுங்க!
ரத்தத்தின் ரத்தம்
வீரப்பன்
மதுரையில் விழா வெள்ளி செங்கோல் ஜெயலலிதா கொடுத்தார்




# கல்கி

1986 ஜூலை 20
மலர் 44 இதழ் 51
அக்ஷய ஆடி 4




## வயலிலே வறட்சி; வார்த்தைகளோ வெள்ளம்!

"மேட்டூர் திறந்துவிடப்படாவிட்டால் என்ன, புன்செய் பயிர் செய்யலாமே?" என்று தமிழக அரசு அபார யோசனை கூறியுள்ளது. இதன் மூலம், "ரொட்டி இல்லாவிட்டால் என்ன? மக்கள் கேக் சாப்பிடலாமே" என்று சொன்ன பிரெஞ்சு அரசியை வென்று வாகை சூடிக் கொண்டுள்ளது தமிழக அரசு! 107 டிகிரி வெயிலில் வயலெல்லாம் வரண்டு, பாளம் பாளமாக வெடித்திருக்கும்போது, இந்தக் களி நிலத்தில் புன்செய் பயிர் வைக்கத் தண்ணீருக்கு எங்கே போவான் விவசாயி என்று யாரும் யோசித்ததாகத் தெரியவில்லை. மேலும் புன்செய் பயிர் வைப்பதென்றால், இந்த ஆண்டு குறுவை சாகுபடி கிடையாது. மேட்டூர் காலதாமதமாகக் கூடத் திறந்து விடப்படாது என்று முடிவாகிவிட்டதா? இதை உறுதியாகக் கூற யாரும் அரசுத் தரப்பில் இதுவரை முன்வரவில்லை. இத்தகைய நிச்சயமற்ற சூழலில் விவசாயி என்ன செய்வான்? எப்படி திட்டமிடுவான்? நிலத்தடி நீரைப் பயன்படுத்தலாம் என்றால் பெருவாரியான ஆழ்குழாய்க் கிணறுகளும் வரண்டு கிடக்கின்றன!

இந்தச் சந்தர்ப்பத்தில் ஆளும் கட்சி மதுரையில் சாதனை மாநாடு நடத்தி, முதல்வருக்கு ரூ 70,000 பெறுமானமுள்ள ஆளுயர வெள்ளிச் செங்கோல் பரிசளிப்பது எவ்வளவு பொருத்தம்! ஒருவேளை அந்தச் செங்கோலைக் காவிரி ஆற்றின் படுகையில் நட்டால் நீர் பீச்சி அடித்து வெள்ளம் கரைபுரண்டு ஓடுமோ?

கர்நாடக முதல்வருடன் நடந்த பேச்சு வார்த்தையின் முடிவில், "ஹெக்டே தமிழ் நாட்டுக்குத் தண்ணீர் தரமாட்டேனென்று விட்டார்" என்று பத்திரிகை நிருபர்களிடம் வருத்தம் தோய்ந்த குரலில் கூறியதுடன் தமது கடமை முடிந்து போனதாகத் தமிழக முதல்வர் கருதிவிட மாட்டார் என்று நம்புகிறோம். ஹெக்டே மீது பழியைப் போட்டுவிட்டுச் சோகமாக அறிக்கை விடுவதில் பொருள் இல்லை. எம்.ஜி. ஆர். கர்நாடக மாநில முதல்வராக இருந்தால் இன்று ஹெக்டே நடந்து கொண்ட மாதிரிதான் நடந்து கொண்டிருக்க முடியும். கர்நாடக அரசின் போக்கில் உள்ள அநீதிகளை எடுத்துக்காட்டி, நமது உரிமைகளுக்காக வன்மையான விதத்தில் போராட இன்றைய தமிழக அரசு தவறிவிட்டது.

பாரதப் பிரதமரோ பாதியில் நின்று போன பாசன அமைச்சர்கள் மாநாடு ஒன்றினைக் கூட்டி, பத்திரிகைகளில் பத்தி பத்தியாகச் செய்தி வெளியாகும் அளவுக்குப் பேசிவிட்டுப் போய்விட்டார். இந்தப் பேச்சு மழையால் ரோஷம் கொண்டு கொஞ்சம் பருவ மழை பெய்தாலும் பயனுண்டு. அதுவுமில்லை! பிரதமரின் பேச்சில் முக்கிய அம்சம் இதுதான்: மாநிலங்களுக்குத் தேசிய உணர்வு இல்லை; பரந்த மனப்பான்மை இல்லை; குறுகிய கண்ணோட்டமே நிலவுகிறது; இதனால், மாநிலங்களுக்கிடையே, நதி நீர்ப் பங்கீடு பற்றி விவாதங்கள் நீடித்துக் கொண்டே போகின்றன; இதற்கிடையில் பல நதிகளின் நீர் கடலில் விழுந்து வீணாகிக் கொண்டிருக்கிறது!

படிப்பதற்குச் சுவாரஸ்யமாக, உயர்ந்த நோக்கம் கொண்டதாக இருக்கிறது பிரதமரின் பேச்சு. ஆனால் நடைமுறையில் உதவாது. இந்த மாநாட்டில் கலந்து கொண்ட அத்தனை மாநில அமைச்சர்களும் அவரவர் மாநிலம் திரும்பியதும் மீண்டும் தங்கள் மாநிலம், தங்கள் மக்கள், அவர்களிடம் உள்ள வோட்டு, தங்கள் பதவி என்றுதான் எண்ணுவார்களே தவிர, அண்டை மாநிலம் பற்றி நினைத்துக்கூடப் பார்க்கமாட்டார்கள். ஆண்டாண்டு காலமாகத் தமிழகத்துக்கு இருந்து வரும் காவிரி நீர் உரிமையைக் கர்நாடகம் மதிக்கத் தயாராயில்லை. சென்னைக்குக் குடி நீர் வழங்குவது குறித்து நேற்றுத்தான் பிரதமர் இந்திரா முன்பு ஒப்புதல் அளித்த கர்நாடகமும் மகாராஷ்டிரமும் இன்று தகராறு செய்கின்றன. இந்த லட்சணத்தில் பரந்த மனப்பான்மையாவது, தேசிய நோக்காவது?

செய்ய வேண்டியது ஒன்றே. உச்ச நீதிமன்ற நீதிபதிகளுக்கு நிகரான அந்தஸ்துடன் மூன்று அல்லது ஐந்து நீதிபதிகள் அடங்கிய நதி நீர் வழக்காடு மன்றம் அமைய வேண்டும். இதற்கு நாடாளுமன்றம் சட்டம் இயற்ற வேண்டும். அந்த நீதிமன்றத்தில் மாநிலங்கள் தங்கள் உரிமைகளுக்காக வழக்காட வேண்டும். நீதிபதிகளின் தீர்ப்பை அனைவரும் ஏற்றுத் தலைவணங்கி அதன்படி நடக்க வேண்டும். இதைச் செய்தால் காவிரி நீர் தமிழகத்துக்குக் கிடைப்பது உறுதி. அப்படியே இல்லை என்று தீர்மானமாகிவிட்டாலும் இன்றைய நிச்சயமற்ற நிலை இராது. தஞ்சை, விவசாயத்தை மட்டும் நம்பியிராமல் வேறு மார்க்கங்களில் வளம் பெற முயலலாம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# ஒரு பானை உடைந்தபோது...

இரவு முழுவதும் ஒரு பாட்டம் அடித்து ஓய்ந்திருந்த மழையின் வாசனையோடு இன்னமும் லேசான குளிர் காற்று வீச, கால்களை மடித்து நன்றாகச் சுருண்டு படுத்துக் கொண்டாள் கறுப்பாயி. மூன்று நாட்களாய்த் தண்ணீரைத் தவிர் எதையும் பார்க்காத குடல்கள் புரண்டு புரண்டு ஒன்றையொன்று தின்னாத குறையாகக் காலையிலிருந்தே உறும ஆரம்பித்துவிட்டன.

கோரைப் பாயை விட்டு எழுந்தாள். எண்ணெய் வாடையே அற்றுப் போய், திரிதிரியாய்த் தொங்கிய முடிக் கற்றையை சடார்! சடார்! என்று நாலு சாத்து சாத்தி அள்ளிச் செருகும்போதுதான் அந்த சப்தம் கேட்டது.

"டமார்!" — பானை தண்ணீரோடு கீழே விழுந்து நொறுங்கிப் போகும் ஒலி. தொடர்ந்து பல குரல்கள்.

"அடியாத்தே! ஏன் ஆத்தா, பாத்து நடக்கக் கூடாதா? நல்லாப் போட்டொடச்ச போ!"

"இந்தா! பானைய அப்புறம் பார்க்கலாம். காலு கீலு எங்கனுச்சும் வழண்டு போயிருக்கப் போகுது. நல்லாப் பாரு மொதல்ல!"

"முதல்ல எந்திரி ஆத்தா நீ! காலை நல்லா நீவி வுடு! எந்திரி, எந்திரி!"

சட்டென்று நகர்ந்து, நுழை வாயிலில் தொங்கிய சாக்குப் படுதாவை விலக்கினாள்.

"எலே கறுப்பா....யீ! உன் மாமியா கீழ வுழுந்துட்டுது பாரு புள்ள!" — இவள் தலையைக் கண்டதும் மாரி குரல் கொடுக்க.... மெல்ல வெளியில் வந்தாள். மாமியாரைப் பார்த்தாள். நெடுநெடுவென்று வளர்ந்து.... குச்சி குச்சியாய்த் தொங்கும் கை, கால்களும், அரசாங்கத்தின் இலவசப் புடவையும் பாம்படக் காதுமாய்த் தண்ணீரில் விழுந்து எழுந்த கோலத்தோடு....

"நல்லாப் பொளங்கின பானை.... பாவிமவ! இந்தக் கல்லு சடார்னு ஒரு நிமிஷம் ஆளையே தடுக்கி கவுத்துட்டுது. நல்லாப் பொளங்கிட்டிருந்த பானை உருத் தெரியாமப் போச்சு.....!" பொங்கும் கண்களோடு புலம்பியபடி நின்ற மாமியாரைப் பார்க்க முடியாமல் கண்களில் நீர்த் திரையிட்டு மறைக்க அப்படியே நின்றாள் கறுப்பாயி.

கல்லா தடுக்கியது? கால் படி அரிசி வடித்து உருட்டி உருட்டிப் போடும் வயிற்றில், இரண்டு நாட்களாய் ஊற்றிக் கொண்டிருக்கும் பச்சைத் தண்ணீரல்லவா தடுக்கியது. தானே கண்கள் மங்கச் சுருண்டிருக்கும் போது, இந்தக் கிழவி....?

குனிந்து கால் முட்டியைத் தடவிக் கொண்டிருக்கும் மாமியாரைப் பார்த்தாள். வாயில்லாப் பூச்சி! அதிசயமாய் மகன் நீட்டும் கால் அரை ரூபாய்களை வெற்றிலைகூட வாங்கிக் குதப்பாமல் சுருக்குப் பையில் இறுக்கிக் கொண்டு பட்டினி நாட்களில்



பன்னும் மயுமாக வாங்கி வந்து விடுவான். குடித்துவிட்டு, உளரும் வார்த்தைகளோடு, நிதானமின்றி அடித்து நொறுக்கும் மகனேடு ஒவ்வொரு முறையும் என்னமாய் மல்லுக்கு நிற்பாள்!

''எலே! உனக்கு வாக்குப்பட்டு பசி, பட்டினியாக் கிடக்கிற அந்தப் புள்ளைய ஏண்டா இப்படி போட்டு வதைக்கற நீ! தோ பாரு! இனிமே என் மேல கைய வச்சுப் புட்டு, அப்புறமா அவகிட்ட போ, உதைக்க!'' அவள் முன்னல் வந்து நின்று மறைத்தபடி என்னமாய்க் கத்தினுள் ஒருநாள்!

இமை கொட்டாமல் கிழவியையே பார்த்தாள் கறுப்பாயி. சேற்றேடு பிசைந்தபடி இருந்த புடவையைத் தண்ணீர் விட்டு அலசிப் பிழிந்தபடி வந்தாள் கிழவி.

''போ புள்ள ஒன்னுமில்ல! எழவெடுத்த கன்னு சட்டுனு மறைச்சு, நல்ல பானை ஒன்னு போச்சு போ!'' — உள்ளே நுழையப்போனவளை கறுப்பாயினுடைய கை தடுத்தது.

''உள்ளார வராத நீனு!''

கிழவி கேள்விக் குறியோடு நிமிர்ந்தாள்.

''என்ன தைரியம் இருந்தா நல்லாப் பொளங்கிக்கிட்டிருந்த பழம் பானையைப் போட்டு உடைச்சுப்புட்டு நியாயம் பேசிக்கிட்டு வருவ, ம்...?'' — கோவைப் பழமாகக் கண்கள் பளபளக்க நின்ற கறுப்பாயியை ஆச்சரியத்தோடு பார்த்தாள் கிழவி. நகர ஆரம்பித்த கூட்டம் அப்படியே நிற்க, தலையைக் குனிந்து கொண்டாள்.

கறுப்பாயி சக்தி முழுவதையும் திரட்டிக் குரலை பெரிதாக்கிக் கொண்டாள். ''மூனு கழுதை வயசாச்சே! கொஞ்சமாவது அறிவு வேண்டாம்? இங்கறதுல கொறையா வச்சே! மூனு வேளையும் முழி பிதுங்குது சோறு. கல்லுத் தடுக்கிச்சா, கல்லு? கேட்க ஆளு இல்லேன்னு நினைச்சியா?''

''சரி சரி போவுது வுடு கறுப்பாயி. கத்திப் புட்டா போன பானை திரும்பியா வரப் போவுது?'' என்ற மாரியை முறைத்தாள்.

''அட நீ சும்மா கிட! இந்தக் கிழவியை சாமான்யமா எடை வைக்காத. என் புருஷன் ஒரு பிள்ளைதானு இவளுக்கு?'' கிழவி பக்கம் திரும்பிக் கேட்டாள். ''இன்னொன்னையும் பெத்துப் போட்டிருக்கியே.... காசு பூந்து விளையாடுது அங்க. கொழிக்கறாங்க! அங்கன போயிக் குந்தி அழும்பு பண்றது! என் வீட்டையேவளைதோண்டிக்குழிபறிக்கறியே! ஏன்? இனிமே இந்த வூட்டுக்குள்ள நுழையாதே போ! உன் மூத்த மருமக வீட்டுப் பானையைப் போட்டு உடைச்சு நொறுக்கு! சின்ன மவன், சின்ன மவன்னு அவரு தலைய மொட்டையடிச்சது போதும்!'' — மூச்சு வாங்கினுள்.

''ஏம் புள்ள, உனக்கு இன்னிக்கு என்ன ஆச்சு?''

''ஹா! பிசாசு பிடிச்சுப் போச்சு. மொகரையப் பாரு. இனிமே இந்தக் குடிசைக்குள்ள காலை எடுத்து வச்ச, உன் முழங்கால் சில்லப் பேத்துப்புடுவேன் பேத்து; ஆமா!''

கத்தியவள், அதே வேகத்தோடு குடிசையினுள் சென்று கிழவியின் இன்னொரு புடவையோடு வந்தாள்.

''இந்தா உன் சீலை!'' புடவை சுருண்டு வாசலில் இருந்த சேற்றில் விழுந்தது.

''உப்புப்போட்டுத்தின்னறபொம்பளையா இருந்தா பொறுக்கிக்கிட்டு நடையக் கட்டு... ரோசம், மானம், சூடு, சொரணை இருக்கிறவளா இருந்தா இந்தப் பக்கம் வரக்கூடாது!'' முடித்த ஆக்ரோஷத்தோடு உள்ளே போய்த் தொப்பென்று பாயில் விழுந்தாள்.



**உமா குமார்**

'படா'ரென்று மேலே விழுந்த விளக்கு மாற்றைக் கண்டு எழுந்தாள். எதிரே காளிமுத்து. காளியின் மறு உருவமாக நின்றான்.

''ஏண்டி! என்ன தைரியம் இருந்தா ஆத்தாவ அத்தனை பேச்சுப் பேசி.... ஏசி அடிச்சு விரட்டியிருப்ப? ம்...! அத்தனை கொழுப்பு வச்சுப் போச்சா உனக்கு?'' உறுமிக் கொண்டே அவன் உதைத்த உதையில் மூலையில் போய் விழுந்தாள் கறுப்பாயி.

''இந்தக் குடிசை சனமே சிரிக்குதே நாயே!'' பேசிப் பேசி அவன் கொடுத்த அடி உதைகளை மௌனமாக ஏற்றுக் கொண்டவள் அவன் ஓய்ந்ததும் எழுந்தாள்.

''ஆமாய்யா, உன் ஆத்தாவ நாலு அடிக்காத தோசமா பேசித்தான் அனுப்பினேன். இல்ல விரட்டினேன். ஏன்னேன்னு கேளுய்யா பதில் சொல்றேன்!'' என்றவள் குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

''நாலும் உழைக்கிறேண்டின்னு வாரத்துக் கொருக்கா அஞ்சு ரூபா கொண்டு வரே! ஒரு படியரிசி எத்தனை ரூபாய்யா? உன்னைக் கட்டிக்கிட்ட தோஷத்துக்காக பாதி நாளு பச்சைத் தண்ணிய ஊத்தி வயித்தைக் கழுவறேன் நாலு. பெத்தவ அவளுக்கெதுக்கய்யா தலைவிதி? சின்ன மவன், சின்ன மவன்னு உம் மேல உசிர வச்சுக்கிட்டு கொலைப் பட்டினி கிடக்கய்யா அந்தக் கிழவி. பத்துப் பத்து காசாச் சேர்த்துப் பொறைய வாங்கி உன்வயித்துக்குத்தானே அடைக்குது. அதுக்கு ஒருநாள், ஒரு வேளைக் கஞ்சி ஊத்த நம்மாலே முடியலே! பெரிய மவன் ரிக்ஷா ஓட்டி நாலு காசு பண்ணித் திங்குது. அங்கனயாச்சும் போய் நிம்மதியா சோத்தத் தின்னுப்புட்டு இன்னும் கூட இரண்டு வருஷம் உயிரோட நல்லா இருக்கட்டுமய்யா அது! உன் கிட்டக் கிடந்தா குடல் காய்ஞ்சே சீக்கிரம் போய்ச் சேர்ந்துடும். நான் திங்கற பணியாரத்துல பங்கு கேட்டா சந்தோஷமா தூக்கிக் கொடுப்பேன். ஆனா என் மாமியார் பட்டினிலே பங்குக்கு நிக்கறா. அதான்யா பஞ்சால நெஞ்சத்தைத் துடைச்சுப் போட்டுட்டு நாலு வார்த்தைதிட்டிவிரட்டினேன். இதுதப்புன்னு தாராளமா உன் ஆத்தாவ கூட்டிக் கொண்டாந்து வச்சுக்க. நான் வேணாம்னு சொல்லலே!'' — அவன் முடிக்க, பிரமித்துப் போய் நின்றான் காளிமுத்து!

# ஒரு தலைவரே முறையிடுகிறார்



'எங்கள் ஊரில் 140 ஏக்கர் பரப்பளவுள்ள அத்திப்பள்ளம் ஏரி என்று ஓர் ஏரி இருக்கிறது. ஆனால் அதற்குத் தண்ணீர் வரும்கால்வாய்தூர்ந்துபோயிருப்பதால் கடந்த ஐந்தாண்டுகளாக ஏரிக்குத் தண்ணீர் வருவதில்லை. இதனால் சுமார் இருநூறு ஏக்கர் நிலம் பாசன வசதியில்லாமல் தரிசாகக் கிடக்கிறது. ஏரியில் தண்ணீர் இல்லாததால் சுற்றுப்புறக் கிணறுகளிலும், தண்ணீர் இல்லாமல் மேலும் பல நூறு ஏக்கர்கள் சும்மா கிடக்கின்றது. சுருக்கமாகச் சொன்னால் இப்போது குடிநீருக்கே தத்தளித்துக் கொண்டுதான் இருக்கிறோம். இதோடு சுமார் நூற்றைம்பது மாணவ, மாணவிகள் படிக்கும் துவக்கப் பள்ளிக்கும் சரியான கட்டட வசதி இல்லை. சத்துணவுக் கூடத்திற்கும் இதுவரை கட்டடம் கட்டப்படவில்லை...

— இப்படி ஊத்தங்கரை அருகில் இருக்கும் கவுண்டனூர் பஞ்சாயத்துத் தலைவர் மாணிக்கத்திடமிருந்து ஒரு கடிதம் வந்தபோது நமக்கு லேசான தோர் அதிர்ச்சி; பிரச்னைகளைத் தீர்த்து வைக்க வேண்டிய ஒரு தலைவரே நம்மிடம் பிரச்னைகளைச் சொல்லி முறையிடுகிறாரே என்று! எனவே, அவரைச் சந்தித்தோம்.

''என்னங்க? நீங்களோ தலைவர். உங்களாலேயே தீர்க்க முடியாத பிரச்னைகளா?''

''எங்கள் பஞ்சாயத்தில் மொத்தம் ஏழு கிராமங்கள் இருக்கின்றன. ஆனா ஒரும் வருட வருமானம் ஐந்தாயிரத்திற்குள்ளேதான். இங்குள்ள பிரச்னைகளைத் தீர்க்கவோ ஐம்பதாயிரம் ரூபாயாவது தேவை. பஞ்சாயத்துத் தேர்தலுக்கு முன்பே எம். பி., எம். எல். ஏ., என்று பலரிடமும் முறையிட்டுப் பார்த்து விட்டோம். ஏதும் தீர்ந்தபாடில்லை. நாங்களே தீர்த்துக் கொள்ளவும் எங்களிடம் பணமில்லை. என்ன செய்வது?''

''யூனியன் கூட்டங்களில் இதுபற்றி நீங்கள் ஏதும் பேசவில்லையா?

''இதுவரை ஒரேயொரு முறைதாங்க யூனியன் கூட்டத்தையே கூட்டியிருக்காங்க. அதுவும்துணைத்தலைவர் தேர்தலை நடத்துவதற்காகத்தான் கூட்டினாங்க. அடுத்த முறை கூட்டும்போதுதான் இதுபற்றியொரு தீர்மானம் கொண்டு வரலாம் என்றிருக்கிறேன்!''

''அது சரிங்க, நல்ல விஷயம்தான்! ஆனால், இந்தப் பிரச்னைகள் தீருவதற்கு எங்களால் என்ன செய்ய முடியுமென்று நினைக்கிறீர்கள்?''

''நீங்கள் பத்திரிகையில் எழுதுவீர்கள். கலெக்டரிடம் சொல்லுவீர்கள். அதனால் அது பலருடைய கவனத்திற்கும் போகும். அப்படிப் போகும் போது அரசாங்கமும் கொஞ்சம் அதிகமாகக் கவனம் செலுத்தாதா, எங்கள் பிரச்னைகள் தீராதா? என்ற நப்பாசைதான். அதனால்தான் உங்களுக்கு எழுதினேன்!'' என்றார் மாணிக்கம்.

குடும்பத்தோடு வந்து தன் மகளைப் பெண் பார்த்துவிட்டுப் போன மறு வாரமே சுந்தரேசன் அவர்கள் வீட்டிற்குச் சென்றிருந்தார்.

அப்போது மோகன் வீட்டில் இல்லை. அம்மா புஷ்பவள்ளி மட்டுமே இருந்தாள். முகம் மலர்ந்து அவரை வரவேற்றாள்.

''வாங்க.... உட்காருங்க.''

சுந்தரேசன் அமர்ந்தார். பொசுக்கென்று அரை அடிக்குச் சோபா உள்ளே போயிற்று. அப்போதுதான் அதைக்கவனித்தார். சோபா புதுசாய் இருந்தது. பழைய சோபாவைக் காணோம்.

''அவர் வெளியூர் போயிருக்காரு. அவர் வந்ததுக்கப்புறமாப் புறப்பட்டு வரலாம்னு யோசனை பண்ணிக்கிட்டிருந்தேன். அதுக்குள்ளாற நீங்களே வந்துட்டீங்க.''

அவர் காப்பியை வாங்கிக் கொண்டார். வாட்டமாய்ச் சாய்ந்து உட்கார்ந்தார்.

''அப்ப நான் நினைச்சது சரியாப் போச்சு.''

புஷ்பவள்ளியின் முகம் மேலும் மலர்ந்தது.

''பெண்ணை எங்க எல்லோருக்கும் பிடிச்சிருக்கு. அதுல ஒண்ணும் சந்தேகமில்லை.''

''பையனுக்கும் பிடிச்சிருக்கணுமோல்லியோ? அதுதானே முக்கியம்.''

''அவனுக்குப் பிடிக்காமலா? அவனும் இப்ப வர்ற நேரம்தான்.''

''வரட்டும். நிதானமா வரட்டும். இப்போ மணி என்ன?'' — அவர் கேட்டு முடிப்பதற்குள் சுவர்க் கடிகாரம் மிக இனிமையாக ஆறு முறை வயலின் வாசித்து நிறுத்தியது. ஆச்சரியமாக நிமிர்ந்து பார்த்தார்.

புதுக் கடிகாரம்.

''இதுக்கு முன்னலை இங்கே வேறொரு கடிகாரம் இருந்திச்சுல்லை?''

''ஆமாம் அதையும் வாங்கி ரெண்டு மாசம் தான் இருக்கும். பையனுக்கு அதைப் பிடிக்கலை. அதான் அதை வித்துட்டு இதை வாங்கிட்டு வந்துட்டான்.''

சொல்லும்போது அந்த அம்மாவுக்கு ரொம்பவும் பெருமையாய் இருந்தது. சுந்தரேசன் சன்னமாய்ச் சிரித்தார்.

''இந்தக் காலத்து இளைஞர்களுக்கு இது ஒரு வேடிக்கை போலிருக்கு.''

அவள் உள்ளே போய்க் குரல் கொடுத்தாள். ''மேரி வீட்டைப் பெருக்கு. எங்கேடி போய்த் தொலைஞ்சே?''

அடுத்த நிமிடம் வேலைக்காரி துடைப்பத்துடன் வந்தாள்.

''அம்மா ஃபேனை அணைச்சுறட்டுமா?''

''ஏ.ஸி.யப் போட்டு விடுடி கழுதை! கேள்வி கேட்டுக்கிட்டு.''

அவள் முகத்தைப் பார்க்கப் பாவமாக இருந்தது. வாயில்லாத ஜீவனாய் ஏ.ஸி.யை ஆன் செய்து, ஃபேனை அணைத்துவிட்டுப் பெருக்கத் தொடங்கினாள். அவ்வளவு நேரமாக அவர் காத்திருந்தும் மோகன் வந்த பாடில்லை.

புஷ்பவள்ளி அம்மாள் கூடத்திற்கு வந்த



தும் விடை பெற்றுக் கொண்டு எழுந்தார். ''அப்ப நான் வரட்டுமா? ஐயா வந்தாச் சொல்லியனுப்புங்க. அப்புறமாப் பேச வேண்டியதெல்லாம் பேசிக்கலாம்.''

**வா**சலில் மோட்டார் சைக்கிளின் இரைச்சல் கேட்டது. யாராயிருக்கும் என்று எட்டிப் பார்த்த சுந்தரேசன் சற்றே வியப் படைந்தார்.

மோகன்தான் வந்திருந்தான். எழுந்து சென்று அன்புடன் அவனை வரவேற்றார்.

''வாங்க! என்ன இதுவரைக்கும் யாரும் வரலேயேன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன். நானும் உங்க வீட்டுக்கு வந்து ஒரு வாரம் ஆயிடிச்சே?''

''அம்மா சொன்னாங்க!''

இருக்கையைக் காட்டினார்.

''உட்காருங்க. போன தடவை நீங்க வந்தப்போ ஸ்கூட்டர்லவந்தீங்க இல்லே? அதான் மோட்டார் சைக்கிள் சத்தத்தைக் கேட்டதும் யாரோன்னு நினைச்சுட்டேன்.''

''அதுவா.... அந்த ஸ்கூட்டரை வித்துட்டேன். கொஞ்சம் பழசான மாதிரியிருந்தது. மேலும் அதைவிட எனக்கு இதுதான் ரொம்ப வசதியா இருக்கு.''

''அது சரி. இதுதான் உங்க பர்ஸனாலிட்டிக்கு ரொம்பப் பொருத்தமா இருக்கு'' என்று மெச்சிக் கொண்டவர் விஷயத்திற்கு வந்தார்.

''அப்பா வந்துட்டாரா?''

''நேத்துத்தான் வந்தார். உங்களோட ஏதோ பேசணும்னார். நாளைக்கு முடிஞ்சா சாயங்காலமா உங்களை வரச் சொன்னார். உங்களுக்கு எப்படி சௌகரியம்?''

''இதுல என் சௌகரியம் என்ன இருக்கு? நாளைக்கே பேஷா வந்துட்டா போறது. சாயங்காலமா ஆறு மணிக்கு வரேன்னு அப்பாகிட்டே சொல்லுங்க. ரமா காப்பி கொண்டாம்மா.''

சிறிது நேரத்திற்கெல்லாம் ரமா காப்பியுடன் தவழ்ந்து வந்தாள். இரண்டாம் முறையாக அவனுக்கு அவள் அழகை ரசிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. புன்முறுவலுடன் காப்பியைப் பெற்றுக் கொண்டான்.

அவள் மறைந்ததும் பாக்கெட்டிலிருந்து தன் வீட்டு விலாச அட்டையை எடுத்து அவரிடம் நீட்டினான்.

''என்ன இது?''

''வீட்டு அட்ரஸ்.''

''வீடு எனக்குத் தெரியும். போன வாரம் தானே வந்திருந்தேன்?''

அவன் மெலிதாய்ச் சிரித்தான்.

''இப்ப நாங்க அந்த வீட்ல இல்லே. ஸ்டர்லிங் ரோட்கிட்ட ஒரு புது வீட்டை வாங்கிகிட்டு அங்கே போயிட்டோம்.''

அவர் புருவங்களை உயர்த்தி வாயைப் பிளந்தார். ''நிஜமாவா சொல்றீங்க?''

அவன் அமைதியாய்த் தலையசைத்தான்.




**வீ**டு பிரமாதமாக இருந்தது.

பளிச்சென்றிருந்த அந்தக் கூடத்தை சுந்தரேசன் ஒருமுறை சுற்றும் முற்றும் பார்த்தார்.

அவர் வந்து உட்கார்ந்த ஓரிரு நிமிடங்களுக்கெல்லாம் மோகனின் அப்பா எதிரே வந்து உட்கார்ந்தார். சில்க் ஜிப்பாவில் தொந்தியை மறைத்திருந்தார்.

''ம்! வீடு எப்படி?''

''ரொம்ப அருமையா இருக்கு.''

''புதுவீடு. இப்பத்தான் கட்டி முடிச்சாங்க. பையன் ஆசைப்பட்டான். வாங்கிப் போட்டுட்டேன்.''

''அது சரி. அது அதுக்கு நேரம் காலம் வரும்போது யோசனை பண்ணாம வாங்கிப் போட்டுட வேண்டியதுதானே'' — சுந்த

• சின்னச்சாமி



# "எங்கள் மாவட்டம் ஏன் முன்னேறவில்லை?"

பரப்பளவில் பெரியது என்று சொல்லி சேலத்திலிருந்து தனி மாவட்டமாய்ப் பிரிக்கப்பட்ட தருமபுரி இன்றைக்கும் பிரமாதமாய் முன்னேறி விடவில்லை; இன்னும் பின் தங்கிய மாவட்டமாகவே தான் உள்ளது. என்ன காரணம்? தருமபுரி தொகுதி சட்டமன்ற உறுப்பினர் (தி.மு.க.) சின்னச்சாமி சொல்கிறார்:

* மொத்த மாவட்டத்துக்கும் இரண்டே இரண்டு கல்லூரிகள்தான்! ஒன்று தருமபுரியில்; இன்னொன்று கிருஷ்ணகிரியில். இரண்டு மே கோ — எஜுகேஷன் காலேஜ்கள். பெண்களுக்கான தனிக் கல்லூரி ஏதும் எங்கள் மாவட்டத்தில் இல்லாதது பெரிய குறை. எனவே பல பெண்கள் சேலத்துக்கும், சென்னைக்கும் பெங்களூருக்குமாகப் போய்ப் படிக்கிறார்கள்.

* பி. காம். படிப்புக்கு இப்போது எவ்வளவு கிராக்கி என்பது எல்லாருக்கும் தெரியும். இரண்டு வருஷத்துக்கு முன்புவரை தருமபுரி கல்லூரிகளில் பி. காம். படிக்க வசதியில்லை. எவ்வளவோ முயற்சி செய்து, கடைசியில் போன வருஷம்தான் ஆரம்பித்தார்கள்.

ரேசன் முகத்தில் சந்தோஷம் படர்ந்திருந்தது.

''நான் வெளியூர் போயிருந்ததாலே உங்களைப் பார்க்க முடியாம போயிடுச்சு.''

''அதனாலென்ன? இப்பத்தான் சாவகாசமா பேச நேரம் கிடைச்சிருக்கே?''

''அதுவும்சரிதான்'' என்றவர் தன் மனைவியை ஒருமுறை பார்த்துக் கொண்டார். ''என் மனைவி சொல்லியிருந்தாப் போல இந்தச் சம்பந்தத்துல எல்லோருக்கும் பரம திருப்திதான். பெண்ணையும் எல்லோருக்கும் பிடிச்சிருக்கு. நீங்கதான் மேற்கொண்டு ஏதாவது சொல்லணும். உங்க அபிப்ராயத்தையும் நாங்க தெரிஞ்சுக்கணுமில்லையா?'' அவர் சூழ்நிலையின் இயல்புக்கேற்ற முகபாவத்தோடு சிரித்தார்.

''என்னுடைய விருப்பம் இதுல என்னங்க இருக்கு? நான் பெண்ணைப் பெத்தவன். நீங்கதான் என்ன எதிர் பார்க்கறீங்க? எப்படி எதிர்பார்க்கறீங்கங்கிறதைச் சொல்லணும்.''

மோகனின் அப்பா நிதானமாய்ச் சொன்னார்:

''நீங்க நினைக்கருப்பல இவ்வளவு கொடுங்க, அவ்வளவு கொடுங்கன்னு கேட்கிற ஆசாமிங்க நாங்க இல்லே. உங்களால எவ்வளவு முடியுமோ அவ்வளவு செஞ்சாப் போதும். இதுதான் எங்க விருப்பம், என்னடி வள்ளி?'' என்றவர் திரும்பவும் ஒருமுறை மனைவியைப் பார்த்துக் கொண்டார்.

அவருக்கு ஒரே வியப்பாக இருந்தது. எதுவும் பேசத் தோன்றவில்லை.

மறுபடியும் மோகனின் அப்பாவே கேட்டார்.

''நிச்சயதார்த்தத்தை எப்போ வைச்சுக்கலாம்னு நீங்கதான் ஒரு நல்ல தேதியாப் பார்த்துச் சொல்லணும். எங்கே அலமு? அவளை சீக்கிரம் காப்பி கொண்டு வரச் சொல்லு.''

மகிழ்ச்சி கலந்த அந்த மௌனமான நேரத்தில் அழகான முக லட்சணத்துடன் ஒருத்தி காப்பி ட்ரேயுடன் வந்தாள்.

அவருடைய சிந்தனை தடைபட்டது. காப்பியை எடுத்துக்கொண்டவர் அவளையே கூர்ந்து கவனித்துவிட்டுப் பிறகு கேட்டார்.

''யார் இந்தப் பொண்ணு?''

''புதுசா வேலைக்கு வந்திருக்கா.''

சுந்தரேசன் நெற்றியைச் சொறிந்தார்.

''இதுக்கு முன்னால மேரின்னு ஒருத்தி

* ஓசூரின் தட்பவெப்பம் கால்நடை வளர்ச்சிக்கு மிகவும் ஏற்றது. அங்கே கால்நடைப் பண்ணை உள்ளது. அப்படியிருந்தும் இங்கே ஆரம்பிக்கப்படவிருந்த கால்நடை மருத்துவக் கல்லூரியை நாமக்கல் அருணாசலம் மந்திரியாக இருந்த போது, அவருடைய செல்வாக்கால் நாமக்கல்லுக்குக் கொண்டு போய் விட்டார்கள். இந்த மாவட்டத்தில் வளர்ச்சி பெற்று வரும் ஓசூர் தொழிற்பேட்டை இருக்கிறது. ஆனால் மருத்துவம், இஞ்ஜினியரிங், தொழில் நுட்பம் போன்ற கல்லூரிகள் எதுவுமே இல்லை. இங்கே ஆரம்பிக்கப்படும் என்று சொல்லிக் கொண்டிருந்த மருத்துவக் கல்லூரியையும் அ. தி. மு. க. மந்திரிகள் சேலத்துக்குக் கொண்டு போய் விட்டார்கள்.

* இதுபோலவே, தருமபுரியில் மாலைநேரக் கல்லூரிப் படிப்புக்கும் வசதி இல்லாததால் மத்திய, மாநில அரசுகளிலும், தனியார் நிறுவனங்களிலும் வேலை பார்க்கிறவர்கள், தங்கள் படிப்புத் தகுதியைப் பெருக்கிக் கொள்ள வழியே இல்லாமல் போய் விட்டது.

* அரசாங்கம், தருமபுரி மாவட்டமென்றால் மாற்றாந்தாய் மனப்பான்மை காட்டுவது ஒருபுறமிருக்கட்டும். பாலக்கோட்டில் உள்ள கூட்டுறவு சர்க்கரை ஆலை தமிழகத்தின் சர்க்கரை ஆலைகளிலேயே சிறப்பான ஒன்று. இன்று அதன் நிலைமையைப் பாருங்கள். செயல்படாமல் மூடப்பட்டுள்ளது. காரணம் என்ன? அதிகாரிகளின் மெத்தனப் போக்குத்தான். சரியான முறையில் ஆலையின் இயந்திரங்கள் பராமரிக்கப்படவில்லை. இதனால் கரும்பு சீசனின் உச்ச நேரத்தில் ஆலை இயங்காமல் இங்கே வர வேண்டிய கரும்பெல்லாம் வேறு சர்க்கரை ஆலைகளுக்குப் போக வேண்டியதாகிவிட்டது. இதனால் விவசாயிகளுக்கு ஏகப்பட்ட நஷ்டம்.

* இந்த மாவட்டத்தின் பல பகுதிகளில் சாலை வசதி கிடையாது. குறிப்பாக மலை ஜாதி மக்களுக்கு இது மிகப் பெரும் பிரச்னை. பல இடங்களில் இணைப்புச் சாலைகள் போடப்படாததால் சுற்றுப் பாதைகளில் செல்ல வேண்டிய கட்டாயம். குறிப்பாக பொம்மிடி — தொப்பூர், பொம்மிடி — முத்தம்பட்டி, தொப்பூர் — கோம்பை சாலைகள் போடப்பட்டால் மக்கள் அனாவசியமாக சுமார் ஐம்பது கி. மீ. சுற்றிக் கொண்டு செல்லும் சிரமம் குறையும்.

* இதுவரை தருமபுரி மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் யாரும் தமிழக அமைச்சரவையில் இடம் பெற்றதில்லை. இப்போதுள்ள பாராளுமன்ற துணை சபாநாயகர் தருமபுரிக்காரர்தான். ஆனால் அவரால் எங்கள் மாவட்டம் பெரிய வளர்ச்சியைக் கண்டு விடவில்லை என்பது வருத்தப்பட வேண்டிய உண்மை.

* கடைசியாய், சேலத்து மாம்பழம் என்று சொன்னாலும், தரமான மாம்பழம் நிறைய விளைவதென்னவோ, தருமபுரி மாவட்டத்தில் உள்ள சந்தூர், போச்சம்பள்ளி பகுதிகளில்தான். அதைக் கொண்டு பழரசம் போன்ற பழங்கள் தொடர்பான பொருள்கள் தயாரிக்கிற தொழிற்சாலை ஒன்றை நிறுவ அரசாங்கம் உடனடி நடவடிக்கை எடுத்து, வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தித் தரவேண்டும்.

— **நமது நிருபர்.**

---

இருந்தாளே?''

''அவளா.....? அவ எப்பப் பார்த்தாலும் அழுது வடிஞ்சுக்கிட்டிருந்தா. போயிட்டு வாடி, தாயேன்னு வீட்டுக்கு அனுப்பிச்சுட்டோம்.''

நெஞ்சில்சுருக்கென்று அவருக்குநெருஞ்சி முள் குத்தியது போலிருந்தது. மூளைப் பிரதேசத்தில் கேள்விக் குறிகள் அடுக்கடுக்காய் முளைத்தன. சற்று சிந்தித்தார்.

புதுசு!

நல்ல நிலையில் அழகாக இருக்கும் பொருள்களை விற்றுப் புதிது புதிதாக வாங்குவது இந்தக் குடும்பத்திற்குப் பழக்கமாய்ப் போய்விட்டது. வேலைக்காரியையும் அழகாக இல்லையென்று புது வேலைக்காரியைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்த வீட்டில் எதுவும் சாசுவதம் இல்லை. எது பழசாகி விட்டாலும் அதற்கு மதிப்பு கிடையாது. இதே கதி புதிதாக இந்த வீட்டுக்கு மருமகளாகவரப் போகிறவளுக்கும் நேராதென்பது என்ன நிச்சயம்?

''என்ன யோசனை பண்றீங்க? பஞ்சாங்கம் கொண்டு வரட்டுமா?''

சுந்தரேசன் அவரை ஸ்தூலமாய் ஏறிட்டார். பிறகு மனத்திலிருந்த கொந்தளிப்பை வெளிப்படுத்தாமல் அமைதியாகப் பதிலளித்தார்.

''என் மனைவியோட கலந்து பேசி அப்புறமாச் சொல்லியனுப்பறேன். எதுவும் நம்ம கிட்ட இல்லை. எல்லாம் ஆண்டவன் கிருபை. அவன் நினைச்சா எல்லாம் நல்ல படியா நடக்கும். அப்ப நான் வரட்டுமா?''

குடிக்க இருந்த காப்பியை அப்படியே சோபாவின் கீழே வைத்துவிட்டு எழுந்தார்.

''என்ன உடனே கிளம்பிட்டீங்க? உட்காருங்க. நிதானமா சாப்டுட்டுப்போகலாம்.''

''இல்லை'' என்றார் சுந்தரேசன் உடைந்த குரலில். ''எனக்கு முக்கியமான வேலை இருக்கு. இனியும் நேரத்தை நான் வீணடிக்க விரும்பலை'' — யாருடைய பதிலுக்கும் காத்திராமல் விருட்டென நடந்தார். மோகனின் அப்பா அப்போதும் விடாமல் பின்னாலேயே வந்தார்.

''என்னங்க, உங்களைத்தான். கொஞ்சம் நில்லுங்க.''

ஆனால் சுந்தரேசனோ திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. நடந்து கொண்டே இருந்தார்.

எதிர்பார்ப்புக்கு
அப்பாற்பட்ட அரியதொரு படைப்பு!



மோதி காண்டினெண்டல்
R80 நைலான் கார் டயர்

மை லே ஜ்

ப்ளஸ!

ஆம், உண்மையைச் சொல்லப்போனல், இது ஒரு
ப்பற்ற, அரிய படைப்பு !

**ஆராய்ச்சியே இதன் முதலீடு**

ல கோடி ரூபாய் செலவிலான மோதி காண்டினென்டல்
ஆராய்ச்சியே, நிகரற்ற தொழில் நுட்பச் சிறப்புடைய இந்த
80 நைலான் கார் டயரைப் படைத்துள்ளது.

**மேலும் பல சிறப்புகள்.**

யரிய R80 ப்ரீமியம் டயர், கூடுதல் அகலம் கொண்
தால், அதிக உறுதியான பிடிமானத்தைத் தருகிறது.

ாலையில் நீங்கள் செல்லும் போது, இதுவரை அறிந்திராத
ந்த ஒரு பிடிமானத்தை R80 அளிப்பதற்கு இன்னும்
இரு காரணங்கள் : விஞ்ஞான ரீதியில் வடிவமைக்கப்
ட்ட, 15% அதிக நான்-ஸ்கிட் டெப்த் (சருக்காமல், வழு
காமல் இருக்க 15% அதிக ஆழமுடையது) அடங்கிய ட்ரட்
ரப்பு, நெளிந்து, வளைந்து அமைக்கப்பட்ட ஏழு ரிப்புகள்,

**எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்டது.**

ஆம், இது எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்ட ஒரு படைப்பு
இதனல் நீங்கள் ஒரு போதும் நினைத்துப் பார்த்திராத மேம்
பட்ட மைலேஜ் இப்பொழுது கிடைத்திடும் வாய்ப்புள்ளது.
உயரிய தொழில்திறன் அளித்திடும் இந்த வாய்ப்பினை நழுவ
விட்டு விடாதீர்கள். R80 க்கு மாறுங்கள்- இனி நீங்கள்
வேறெந்த டயருக்கும் மாறமாட்டீர்கள்.





# மோதி காண்டினென்டல்



ஒரு போதும் அயராத டயர்

**12**

# லஞ்ச் டைம்

(லஞ்ச் ரூமில் கூட்டம் குறைந்திருந்தது. ஜி. எம். ராகவாச்சாரி, பாண்டியன், முத்து, சாம்பசிவம், சிவராமன், ஆனந்த் — இந்த ஆறு பேர்தான் ஆஜராகியிருந்தனர். மாடசாமி சிவராமனுக்கு டிபன், காப்பி வாங்க ஓட்டலுக்குப் போயிருந்தான். மைதிலி வருகைக்காக ஜி. எம். வாசற்படி பக்கம் அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தார்.)

ஆனந்த்: ஜி. எம். சார், யாருக்காக வெயிட் பண்ணிக்கிட்டிருக்கீங்க?

பாண்டி: இது என்னப்பா அசட்டுக் கேள்வி? மிஸஸ் மைதிலிக்காகத்தான்...

(ராகவாச்சாரி எரித்து விடுவது போல் முறைக்கிறார்.)

ஆனந்த்: ஸாரி ஸார், நீங்க வெயிட் பண்ணிப் பிரயோசனமில்லே. மைதிலி இனிமே லஞ்ச் ரூமுக்கு வர மாட்டாங்க.

ஜி. எம்.: ஏன்?

ஆனந்த்: அவங்க ஹஸ்பெண்ட் அவங்களை டேபிள்லேயே லஞ்ச் சாப்பிடச் சொல்லிட்டாராம்.

ஜி. எம்.: எதுக்காக?

பாண்டி: அதான் நம்ம ஆபீஸ் லட்சணம், பேப்பர் பேப்பரா சந்தி சிரிக்குதே. லஞ்ச் ரூம்லே நாம பேசிக்கிறதெல்லாம் கூட இன்னிக்கு 'அன்றாட வம்பு'ங்கிற பத்திரிகைலே வந்திருக்கு... நம்ம ஆளு ஒருத்தன்தான் அவங்களுக்கு நியூஸ் குடுத்திருக்கணும்...

(எல்லோரும் முத்துவை ஒரு தினுசாகப் பார்க்கிறார்கள்.)

சிவரா: என்ன எழுதியிருக்கான்... நான் பார்க்கலையே,... யாராவது பேப்பர் வெச்சிருக்கீங்களா?

சாம்ப: இதோ இருக்கே...

ராகவா: ஆனந்த், வாங்கிப் படிங்க, கேட்போம்.

ஆனந்த்: அடேடே, முதல் பக்கத்திலேயே பெரிய டைப்லே போட்டிருக்கானே...

ஜி. எம்.: படி...

ஆனந்த்: காதலர்கள் எங்கே? போலீஸ் வலைபோட்டுத் தேடுகிறது....... சென்னையிலுள்ள தனியார் கம்பெனி ஒன்றில் பணியாற்றிக் கொண்டிருந்த ரகுவீர் என்ற இளைஞர் மாயவரத்தைச் சேர்ந்தவர். லாட்ஜ் ஒன்றில் ரூம் எடுத்துக் கொண்டு தங்கியிருந்தார். அதே கம்பெனியில் வேலை செய்து கொண்டிருந்த சுசீலா என்ற வேறு ஜாதிப் பெண்ணுடன் இவர் நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தார். இந்த விஷயம் அந்த ஆபீசில் எல்லோருக்கும் தெரியும். லஞ்ச் டைமில் எல்லோர் முன்னிலையிலும் இவர்கள் 'கண்ணே, மணியே, கட்டிக் கரும்பே, கனியமுதே' என்றெல்லாம் கொஞ்சிக் காதல் லீலைகள் புரிவது வழக்கமாம். பெற்றோர்கள் எதிர்த்தாலும் கல்யாணம் செய்து கொள்வதில் உறுதியாய் இருந்தார்களாம். சமீபத்தில், கரிவெண்ணெய் வீடியோ விளம்பரத்தில் இருவரும் நெருங்கி நடித்துக் கவர்ச்சி போஸ் கொடுத்திருக்கிறார்கள். இது ஆபீஸ் கௌரவத்துக்கு இழுக்காக இருக்கிறது என்று எம். டி. ரகுவீரை சஸ்பெண்ட் செய்ததோடு, சுசீலாவையும் எச்சரித்திருக்கிறார். மனமுடைந்த இருவரும் சந்தித்துப் பேசியிருக்கிறார்கள். தோழிகளுடன் சினிமாவுக்குப் போவதாக வீட்டில் சொல்லிவிட்டுச் சென்ற சுசீலா வீடு திரும்பவேயில்லை. லாட்ஜில் ரகுவீரின் அறை பூட்டப்பட்டிருந்தது. இருவரையும் இரவு எட்டு மணிக்கு பீச்சில் பார்த்ததாக லாட்ஜ் பையன் சாட்சியம் கூறி



யிருக்கிருன். இரண்டு நாட்களாகச் சென்னை போலீஸ் காதலர்களைத் தீவிரமாகத் தேடிக் கொண்டிருக்கிறது...

சுசீலாவின் அப்பா, தன் பெண்ணின் நடத்தைக்கு ரகுவீர் மட்டும் காரணமில்லை என்றும், அந்தக் 'கம்பெனியின் எம். டி., ஜி. எம்., சக ஊழியர்கள் அத்தனை பேரும் பொறுப்பு ஏற்க வேண்டும் என்றும் போலீஸார் அவர்களைக் கூண்டில் ஏற்றி விசாரிக்க வேண்டும் என்றும் கடுங்கோபத்துடன் கூறினார். இந்த விவகாரம் பற்றி மேலும் பலரை நேரில் சென்று விசாரித்து நமது 'காதல் நிருபர்' எழுதும் விரிவான கட்டுரை ஞாயிறன்று வெளிவரும்.

ராகவா: கிரஹசாரம்... கிரஹசாரம்... நான் அப்பவே சொன்னேன், விளையாட்டுப் பேச்சை ஒரு அளவோட நிறுத்திக்கணும். அதுவே விளையாளு ஸீரியஸ் மேட்டர் ஆயுடும்னு. கேட்டீங்களா? இப்பப் பாருங்க... சே... சே... அசிங்கம்! அசிங்கம்!

ஆனந்த்: எப்ப ஸார் சொன்னீங்க... நீங்களும்தான் 'கல்ப்ரிட்.' விசாரணை வரப் போவுதுன்னு தெரிஞ்சதும் நல்லவர் மாதிரி நைஸாக் கழட்டிக்கப் பார்க்கிறீங்களா?

ராகவா: அந்த நிருபர் வந்தா ஆபீஸ் உள்ளே சேர்க்கிறேனு பார்... வம்புக்காகவே அலையருனுங்க...

(ஒருவருடன் மாடசாமி வருகிருன்.)

மாட: ஜி. எம். ஸார்... இவர்தான் 'அன்ருட வம்பு' பத்திரிகையின் காதல் நிருபர்... உங்களைப் பார்த்துப் பேசணுமாம்.

ராகவா: ரகுவீர் — சுசிலா காதல் விவகாரம் பற்றி எனக்கு ஒண்ணுமே தெரியாது — நீங்க போயிட்டு வாங்க...

நிருபர்: அவங்களோட காதல் லீலைகள் பற்றிக் கேட்கலே... அவங்க ரெண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் விரும்பிக் கல்யாணம் செய்துக்க ரெடியாயிருந்தாங்கங்கிறது உண்மைதானே...?

ராகவா: ஆபீஸ்லே வேலை செய்யறவங்களோட பர்ஸனல் விஷயத்தைப் பத்தித் தெரிஞ்சுக்கிறது என்னோட வேலை இல்லே... மேலே மேலே கேள்வி கேட்காம நீங்க உங்க வேலையைப் பார்த்துக்கிட்டுப் போங்க...

நிருபர்: இதுதாங்க என் வேலை...! இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸம்... துருவித்துருவி ஆராய்ந்து உண்மையைக் கண்டுபிடிக்கிறது... உங்களைக் கொஞ்சம் துருவலாமா?

ராகவா: எனக்கு வேறே வேலை இல்லேன்னு நினைச்சுட்டிருக்கீங்களா?

நிருபர்: உங்களுக்கு நிறைய வேலையிருக்குன்னு எனக்குத் தெரியும்... அதுலே முக்கியமானது மிஸஸ் மைதிலியோட அரட்டை அடிப்பதுதானே...?

(எல்லோரும் நமுட்டுச் சிரிப்பு சிரிக்கிறார்கள்.)





''என்னப்பா முட்டை பிரியாணியில் முட்டையையே காணோம்?''

''என்ன சார் கேள்வி இது? மைசூர் பாகிலே மைசூரா இருக்கிறது?''

— மதுரை செ. மதுக்குமார்.

ராகவா: மாடசாமி, இந்த ஆளை உடனே கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளு.. இல்லேன்னு என் பர்மிஷன் இல்லாம இவரை உள்ளே அழைச்சுக்கிட்டு வந்ததுக்கு உன் மேலே ஆக்ஷன் எடுப்பேன்!

நிருபர்: நீங்க என் கேள்விகளுக்குப் பதில் சொல்லலேன்னு, என்னாலே கட்டுரை எழுத முடியாதுன்னு நினைச்சுக்கிட்டிருக்கிங்களா?

ராகவா: உங்களுக்குப் பத்திரிகைச் சுதந்திரம் இருக்கு. எதை வேண்டுமானாலும் எழுதிட்டுப் போங்களேன். ஐ ஜஸ்ட் டோண்ட் கேர்...

நிருபர்: மிஸ்டர்.... இந்த ஆபீஸ்லே உங்க பத்தாண்டு சாதனைப் பட்டியலே என்னாலே பிட்டுப் பிட்டு வெக்க முடியும்... லேடீஸ்ங்க கிட்டே நீங்க பல்லே இளிக்கிற பவிஷை, போட்டோ எவிடன்ஸோடன் என்னாலே பப்ளிஷ் பண்ண முடியும்... சாலஞ்ச் பண்றீங்களா?

ராகவா: தைரியமிருந்தா பப்ளிஷ் பண்ணு! நான் உன் மேலேயும் எடிட்டர், பப்ளிஷர் மேலேயும் மான நஷ்ட ஈடு வழக்குப் போடுவேன்... இன்னும் ரெண்டே நிமிஷத்துலே இங்கேருந்து நீ போகலேன்னு போலீசுக்குப் போன் பண்ணுவேன்... ஐ ஸ்கௌண்ட்ரல்...!

நிருபர்: சகோதரர்களே! இவர் தற்போது பயன்படுத்திய வார்த்தைக்கு நீங்களெல்லாம் சாட்சிகள்... நீங்கள் இவருக்குப் பயந்து கொண்டு மறுத்தாலும், இதோ இந்த பாக்கெட் டேப் ரிகார்டரில் எல்லாம் ரெகார்டாகியிருக்கிறது. தொழில் முறையில் தன் பணியைச் செய்ய வந்த ஒரு பத்திரிகை நிருபரை வாயில் வந்தபடி பேச இவருக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? இதன் விளைவுகளுக்கு இவர் மட்டுமில்லே, இந்த கம்பெனியும் பொறுப்பேற்க வேண்டிய காலம் சீக்கிரமே வரும் என்று பணிவுடன் கூறிக் கொண்டு இப்போதைக்கு அமைதியாக விடை பெறுகிறேன். நன்றி, வணக்கம்.

(நிருபர் போகிறார்.)

சிவரா: ஜி.. எம். ஸார், பத்திரிகைக் காரங்ககிட்டே எப்படி நைஸா பேசணும்னே உங்களுக்குத் தெரியலே... எங்கிட்டே பேசற மாதிரியே அவர்கிட்டேயும் ரூடா பேசிட்டீங்களே... அவர் உங்களைப் பத்தி கன்னா பின்னான்னு எழுதிட்டா மானம் போயிடுமே...

ஜி. எம்.: இதுக்கெல்லாம் பயப்படறவன் நானில்லே, இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸ்ட்டாம்.... மூஞ்சியைப் பாரு... மனசுலே அருண் ஷோரின்னு நினைப்பு... இது பச்சையான மஞ்சள் பத்திரிகை... சென்சேஷனலிஸ நான்சென்ஸ்... இவன் பொய்யும் பித்தலாட்டமும் எழுதட்டும்... கோர்ட்டுக்கு இழுக்கறேன் பாரு... எனக்குச் சட்டம் தெரியாதுன்னு நினைச்சுண்டிருக்கானு...?

சிவரா: எங்களை வீட்லே வந்து துருவினா?

ஜி. எம்.: நீங்கள் சரியான தொடை நடுங்கிங்கடா.... மடிலே கனம் இருந்தாத் தானே பயப்படணும்.. அவன் இண்டர்வியூ பண்ண உங்க வீட்டுக்கு வந்தான்னா, யாரும் வாயைத் திறக்காதீங்க. யாராவது எதையாவது பேசினீங்கன்னு தெரிஞ்சா எம். டி. கிட்டே சொல்லி ஸிவியர் ஆக்ஷன் எடுக்கச் சொல்வேன்... ஐ ஸீரியஸ்லி வார்ன் ஆல் ஆஃப் யூ...

(வேகமாகப் போகிறார்.)

ஆனந்த்: என்னப்பாது ஜி. எம். பேயாட்டம் போடறாரு... பார்த்தா பபூன் மாதிரியிருக்காரு. அந்த நிருபரை புடி புடின்னு புடிச்சுட்டாரே. அந்த ஆளு மூஞ்சி செத்துப் பூடுச்சே...!

சாம்ப: சாது மிரண்டால் காடு கொள்ளாதுங்கிறுங்களே, கரெக்டாத்தானே இருக்கு?

பாண்டி: என்ன மாடசாமி டல்லாயிருக்கே... நிர்மலா சினிமா ஸ்டாராயிட்டா உன்னாலே அவளைப் பார்த்துப் பேசக் கூட முடியாதேன்னு கவலையாயிருக்கா?

ஆனந்த்: ஒண்ணு செய், மாடசாமி... பேசாமஇந்த வேலையைரிஸைன் செஞ்சுட்டு, நிர்மலாவுக்கு மானேஜரா போயிடேன்.

சிவரா: நடிகை நிர்மலாவின் பழைய காதலன் மானேஜராகிறார். திருமணம் எப்போது?ன்னு பத்திரிகைலே கிசுகிசு வரும். போட்டோ வரும்.. பேட்டி வரும்...

மாட: ஸார், ஒண்ணு சொல்ல மறந்துட்டேனே, சாரதிராஜா அவ பேரை மாத்திட்டாராம்... 'அலேக்'குங்கிறதை 'அலேக்கா'ன்னு மாத்திட்டாராம். 'குளத்தங்கரையிலே ஒரு தாக்கணாங்குருவி'ங்கிற படத்துலே 'அலேக்கா' தான் ஹீரோயினாம்... இதைக் கேள்விப்பட்டுட்டு, சோமராஜன் வந்து 'மணிகைஸ்டேருக்கு மேற்காலே'ங்கிற படத்துக்கு அவளை புக் பண்ணிட்டுப் போயிட்டாராம்... ஸி. சுரேந்தர், 'நிர்மலா, கொஞ்சம் நில்லு'ங்கிற படத்துக்குப் [illegible] பண்ணிருனும் பண்ணுவாராம்...

# வென்றிடும் தரம். ஈடுநிற்கமுடியாத விலைநயத்திலே!



| ...ems | 500g | 1kg | 500g Refill |
|---|---|---|---|
| Nutramul | 17·08 | 33·01 | — |
| Maltova | 22·80 | 43·75 | 20·95 |
| Boost | 22·33 | — | 21·92 |
| Bournvita | 22·81 | 43·76 | 20·95 |

இதன் வகையிலுள்ள இதர
ரகங்களோடு ஒப்பிட்டுப்
பாருங்கள் நியூட்ராமுல் விலைகளை.
அனைத்தையும் விட மிக மிகத்
தாழ்வு.
இதன் தரம் பிறவற்றை விட
எப்படி மிக உயர்வாக
இருக்கிறதோ அதேபோலத்தான்.

**கேட்டீர்களோ
என்னவோ, இதோ
இன்னுமொரு காரணம்
'நியூட்ராமுல் வஸ்தாத்'தாக
விளங்க.**




**நியூட்ரமுல்**

* 86 பிப். நிலவரப்படி. தலைநகர்கள் உள்ளிட்டாமல்,
அறுபோகிருக்கான உச்ச விலைகள்

daCunha/GCM/134/86 TM / R

# வெள்ளி சந்தனப் பேலா பரிசு!



லஞ்ச் டைம் என்ற இந்தத் தொடரின் 12 அத்தியாயங்களை அடுத்தடுத்த இரண்டு வாரங்களில் ஓர் எழுத்தாளர் வீதம் மொத்தம் ஆறு எழுத்தாளர்கள் எழுதியுள்ளனர். அவர்கள் ஹாஸ்ய எழுத்தாளர்கள் என்ற முறையில் உங்களுக்கு ஏற்கெனவே நன்கு அறிமுகமானவர்கள்தான்:

**மெரீனா; ஜே. எஸ். ராகவன்; முகுந்தன்; சாருகேசி; கோவை அனுராதா; கி. ராஜேந்திரன்.**

யார் எந்த அத்தியாயங்களை எழுதியது? கீழே உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங்கள். உறையின்மேல் ''சந்தனப் பேலா பரிசுத் திட்டம்'' என்று குறிப்பிடவும்.

சந்தனப் பேலா பரிசு தவிர, ஆறுதல் பரிசுகளும் உண்டு!

**முடிவு தேதி: ஆகஸ்டு, 4.**

அத்தியாயம் • ஆசிரியர்

---

1.
2.

---

3.
4.

---

5.
6.

---

7.
8.

---

9.
10.

---

11.
12.

பெயர், விலாசம்: ______

ஆனந்த்: இவ்வளவு நியூஸையும் எங்கே பிடிச்சே?

மாட: அலேக்கா சொல்லிச்சு... முன்னே மாதிரியே எங்கிட்டே பிரியமா பேசிச்சு... போகப் போக எப்படியோ?

(ராகவாச்சாரியும், மைதிலியும் மகிழ்ச்சியுடன் வருகிறார்கள்.)

ராகவா: ரகுவீரும், சுசிலாவும் சௌக்கியமா இருக்காங்க... எனக்கு ரெண்டு பேரும் லெட்டர் போட்டிருக்கா...

பாண்டி: எங்கேருந்து ஸார் லெட்டர் வந்திருக்கு?

ராகவா: பரோடாவிலேருந்து!

முத்து: பரோடாவா? அங்கே எதுக்குப் போனாங்க...? ரிலேடிவ்ஸ் யாராவது இருக்காங்களா?

மைதிலி: அங்கே 'காதல் திருமணச் சங்கம்'னு ஒண்ணு இருக்காம்... அவங்களைப் போய்ப் பார்த்தாங்களாம்... இவங்க கல்யாணத்தைச் சீக்கிரமே நடத்தி வைக்கிறதா பிராமிஸ் செஞ்சிருக்காங்களாம்... கல்யாணம் ஆனப்புறம் ஒரு நடை இங்கே வந்து நம்ம எல்லாரையும் பார்த்துட்டுப் போறோம்னு எழுதியிருக்காங்க...

ஆனந்த்: 'காதல் திருமணச் சங்கமா? ஐடியா புதுசாவும் விநோதமாவும் இருக்கே...

சிவரா: அடேடே! இப்பத்தான் எனக்கு ஞாபகம் வருது... * கல்கி லே இதைப் பத்தின துணுக்கு ஒண்ணு வந்திருந்தது. அதைரகுவீர் எனக்குப்படிச்சுக்காட்டினான்...

பாண்டி: நான் கூடப் படிச்சேன்... அந்தச் சங்கம் தேவையானா காதல் கல்யாணத்துக்குப் பண உதவியும் செய்யறதாம்... கல்யாணத்துக்கு அப்புறம் இவங்களுக்குள்ளே ஏதாவது தகராறு வந்தா, தகுந்த ஆலோசனைகள் சொல்லி அதைத் தீர்த்தும் வைக்குதாம்....

ராகவா: அந்த லெட்டர்லே பின்குறிப்புப் போட்டு ரகுவீர் எழுதியிருந்த ஒரு வரி என் மனசைத் தொட்டுது... எங்களுக்குள்ளே உண்மையான அன்பு என்கிற சொத்து இருக்கிற வரைக்கும் வேறே எந்தச் சொத்து பற்றியும் எங்களுக்கு அக்கறையில்லே... பணம் வரும், போகும்... மாறுத அன்புதான் நிரந்தரமான சொத்து. அது அழியாது... அதை யாராலும் அழிக்கவும் முடியாது...!'

மாட: ஸார், பரோடாங்கிற ஊர் எங்கே இருக்குது?

மைதிலி: நீ எதுக்குக் கேட்கறேன்னு தெரியும் மாடசாமி... நீ நிர்மலாவைக் கல்யாணம் செஞ்சிக்க யாராவது குறுக்கே வந்தா, அவளை அந்தச் சங்கத்துக்கு அழைச்சுக்கிட்டுப் போய் கஷ்டமில்லாம கல்யாணம் செஞ்சுக்கலாம்னு நினைக்கிறே, அதானே...

(எல்லோரும் சிரிக்கிறார்கள்)

ராகவா: ஓ.கே... ஓ.கே... அசட்டுப் பிசட்டுப் பேச்சு போறும். லஞ்ச் டைம் முடிஞ்சுப் போச்சு! அவங்க அவங்க சீட்டுக்குப் போய் வேலையைக் கவனிங்க!—

(சுபம்)

---

* 4.5.86 இதழ்: பக்கம் 33.

மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா






மின்னி மிளிரும் மேனி...எந்நாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா**

**உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

# இரண்டு பலன்கள்!




## யூனிட் ட்ரஸ்டின் ஒரு டிவிடெண்டைவிட சிறந்தது எது? இந்த ஜூலை மாதத்தில் வழங்கும் இரண்டு டிவிடெண்டுகள்!!

எப்போதும் கண்டிராத அதிகபட்ச டிவிடெண்ட்—14.75%—இவ்வருடம் யூனிட் ட்ரஸ்ட் வழங்குகிறது.

மேலும் கூடுதலாக 0.5% போனஸ் டிவிடெண்டும் உங்களுக்குக் கிடைக்கின்றது!

மொத்தமாக 15.25% டிவிடெண்ட்.

ஜூலை மாதத்தில் மட்டுமே யூனிட்டுகள் ஆண்டின் மிகக் குறைந்த விலையான ரூ. 12.85க்கு விற்கப்படுகின்றன. பிரதிபலனாக நீங்கள் பெறுவதோ, அதிகமான வருமானம், சுலபமாக பணமாக்கும் வசதி, வரிச்சலுகைகள்.

யூனிட்டுகளை வாங்குவதும் மிக எளிது. அங்கீகரிக்கப்பட்ட வங்கிகள், பிரதம அஞ்சலகங்கள் மற்றும் எங்கள் முக்கிய பிரதிநிதிகள்/ஏஜெண்டுகள் மூலமாகவோ, எங்கள் அலுவலகங்களிலிருந்தோ வாங்கலாம்.

நாடு முழுவதும் 21 லட்சம் பேர் யூனிட்தாரர்களாக இருப்பதன் ரகசியம் இதுதான்!



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
(ஒரு பொதுத்துறை நிதிநிறுவனம்)
தலைமை அலுவலகம்: பம்பாய்

**மண்டல அலுவலகம்:**
தபால் பை எண் 5063
சென்னை-600 001
போன்: 27433/24146

**திருச்சூர் கிளை:**
12/758, தெக்கேமடம் சாலை
திருச்சூர்-680001
போன்: 24690

**விஜயவாடா கிளை:**
27-11-68, மேரி தெரு
கவர்னர்பேட், விஜயவாடா-520 002
போன்: 63964

**பெங்களூர் கிளை:**
முதல் மாடி
வோர்ல்ட் ட்ரேட் சென்டர்
ஸ்டேட் பாங்க் ஆஃப் மைசூர் அருகில்
கெம்பகௌடா சாலை, த. பெ. எண் 9614
பெங்களூர்-560 009

விண்ணப்பங்கள் இப்போது ஸ்பென்சர் அண்டு கோ., சென்னை (மவுண்ட் ரோடு மற்றும் அடையார்), திருவனந்தபுரம், எர்ணாகுளம், கோழிக்கோடு, கோயம்புத்தூர், கரூர், மதுரை, உதகமண்டலம், மெர்க்காரா மற்றும் செகந்திராபாத் அலுவலகங்களிலும் பெற்றுக் கொள்ளப்படும்.



**ஜூலை மாதத்தில் மட்டுமே யூனிட்டுகள் ஆண்டின் மிகக் குறைந்த விலைக்கு விற்கப்படுகின்றன. ரூ. 12.85 மட்டுமே!**

தமிழ்நாட்டிலுள்ள எங்களது முக்கியப் பிரதிநிதிகள்:—

- திரு. எ. தனபால், கோயம்புத்தூர்-18, போன்: 34776 (O)
- திரு. எம். ராமமூர்த்தி, மதுரை-2, போன்: 30160 (O), 43179 (R)
- திரு. கே. முத்துசாமி, தஞ்சாவூர்-7, போன்: 1224 (R)
- திரு. எஸ். கே. [illegible], சேலம்-2, போன்: 51520 (R)
- திரு. எம். ராமலிங்கம், திருச்சி-1, போன்: 28280 (O)
- திரு. பி. நாராயணன், வேலூர்-12, போன்: 21575 (O)
- திரு. எஸ். பாலகிருஷ்ணன், கடலூர்-1, போன்: 546 (O), 46 (R)
- திரு. எஸ். [illegible] சந்திரபோஸ், நாகர்கோவில்-2, போன்: 4449 (R)

Sista's

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**



# கதையின் முடிவு மாறும்; கணக்கின் விடை மாறுமா?

மு. மேத்தா

**பு**த்தகங்கள் இரண்டு வகையாய் எழுதப்படுவதுண்டு.

பட்டு, அனுபவித்து எழுதுவது ஒன்று.

படித்து அனுபவித்து எழுதுவது மற்றொன்று.

இரண்டாம் வகைப் புத்தகங்களை எழுதுபவர்கள் புத்தகங்களைப் படித்துவிட்டுப் புத்தகம் எழுதுகிறார்கள். முதல் வகைப்பட்ட புத்தகங்களை எழுதுகிறவர்களோ வாழ்க்கையைப் படித்துவிட்டுப் புத்தகம் எழுதுகிறார்கள். இத்தகைய புத்தகங்கள்தான் உள்ளத்தோடு ஒட்டுகின்றன. ஏனென்றால் உண்மை என்பது வாழ்க்கையில்தான் இருக்கிறதே தவிர, புத்தகங்களில் இல்லை.

இத்தகைய புத்தகங்களில் சிலவற்றைப் படிக்கிறபோது, ஓர் அபூர்வமான அனுபவம் ஏற்படுகிறது. இவற்றை எழுதியிருக்கிறார்கள் என்பதைவிட, இதயத்தை இறக்கியிருக்கிறார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. உள்ளுக்குள் ஒரு பனிமலையைப் போல உறைந்து போன சிந்தனைகளை உருக்கி, மனத்துக்குள் சுமையாய் கனத்துப் போன எண்ணங்களை இறக்கிஎழுத்தாக்கியிருக்கிறார்கள். இப்படிப் பட்ட ஒரு நூலை எழுதியிருக்கிறார் இளையராஜா.

கவிதைகளின் பொருள் மாறக் கூடும். கதைகளின் முடிவு மாறக்கூடும். ஆனால், எங்கேனும் கணக்குகளின் விடை மாறக் கூடுமா? கணக்கு வெறும் கணக்காக இருக்கிறபோது, அது மாறுவதேஇல்லை. கணக்கிட முடியாத இடத்தை நெருங்கும் போதுதான் கணக்கே வேறுவிதமாய்க் காட்சியளிக்கிறது. நெருங்கும் இடத்தைப் பொறுத்துத்தான் எதுவும் நிறம் பெறுகிறது.

''கூட்டலுக்கும் கழித்தலுக்கும்
ஒரே விடை வந்தால்
எப்படியிருக்கும்?''

என்று நம்மை நோக்கி ஒரு புதிர் போடுகிறார் இளையராஜா. 'அது எப்படி ஒரே விடை வரும்?' என்று நாம் ஆச்சரியப்படுகிறோம். நாம்தான் எதற்கும் கணக்குப் பார்க்கிறவர்களாயிற்றே...

''தன்னோடு தான் சேர்ந்தால்
இறைவன்...
என்னிலிருந்து நான் பிரிந்தால்
அதுவும் இறைவன்தான்''

என்று ஆன்மாவில் விழுகின்ற முடிச்சுகளை அவர் அவிழ்த்துவிடுகிறார்.

உலக மொழிகளிலேயே உயர்ந்த மொழி எது? உலக மொழிகள் அனைத்தையும் ஒருவர் அறிந்திருக்க முடியாது. ஆனால் நாமறிந்த மொழிகளிலேயே உயர்ந்த மொழி எது என்று எண்ணிப் பார்க்க இயலும்.

பாரதியாரும் அப்படித்தான் எண்ணிப் பார்த்தார். அவருக்கு ஒரு பதில் கிடைத்தது. அதன் பெயர் தமிழ். ஆனால், இளையராஜாவுக்கு இன்னொருவிதமான பதில் கிடைக்கிறது. அந்த பதில் நமக்கு வியப்பாக இருக்கிறது.

ஒலிகளின் உலகத்தில் உலா வரும் ஒருவர், சப்தங்களுக்குச் சலங்கை கட்டி நாட்டிய மாடச் செய்யும் ஒருவர், **How to name it?** இசைத்தட்டின் மூலம் வெளிநாட்டு இசை வாணர்களையும் வியக்க வைத்த ஒருவர் என்ன பதில் சொல்கிறார் என்று பாருங்கள்:

''யாமறிந்த மொழிகளிலே...
மௌனம் போல
இனிதாவது எங்கும் காணோம்!''

மௌன மொழியின் மீது இவருக்கு ஏன் மயக்கம்? புரிகிறது. அது ஒன்றுதான் பூமியின் பொதுமொழி. பிரபஞ்சத்துக்கும் மனிதனுக்கும் இடையே ஆதிகாலம் தொட்டு நடந்து வருகிற பேச்சுவார்த்தைக்குப் பெயர்தான் மௌனம். உள்ளுக்குள்ளேயே விவாதம் நடக்கிற உயர்ந்த மொழி அது. எந்த மொழித் திணிப்பிற்கும் இங்கு இடமில்லை. அர்த்தமற்ற வார்த்தைகளின் அகம் பாவங்கள் இங்குதான் அடக்கி வைக்கப்படுகின்றன.

இந்த நூலை எப்படி வர்ணிப்பது என்று நமக்குத் தெரியவில்லை. கவிதைத் தொகுப்பு என்று அழைப்பதா? 'ஆன்மீக அனுபவங்கள்' என்று அறிமுகப்படுத்துவதா? தத்துவச் சிந்தனைகள் என்று சொல்வதா? **How to name it?**

ஆனால் கலைஞன் பதிப்பகம் (சென்னை — 17) வெளியிடான இந்தப் புத்தகத்திற்கு இளையராஜா ஒரு பெயர் வைக்கிறார் — 'வெட்டவெளிதனில் கொட்டிக் கிடக்குது' என்று. 'கொட்டிக் கிடப்பது எது?' என்று எட்டிப் பார்க்க முடிந்தவர்கள் என்ன பெயர் வைப்பது என்ற எண்ணங்களில் மூழ்க மாட்டார்கள். எழுத்துக்களில் மூழ்கிவிடுவார்கள்!



* அக்கரையிலிருந்து பார்க்கும்போது தெரியும் அருவியின் அழகு…

'இப்படித்தான் குளிக்கிற இடத்துக்குப் போகணுமா?'' என்று கேட்டால், 'இல்லீங்க. புதுத் தண்ணீங்க. அதான் கொஞ்சம் செவப்பா இருக்குது'' என்று சம்பந்தமே இல்லாமல் பதில் வரவழைக்கும் அளவுக்கு 'ஹோ' என்கிற இரைச்சலுடன் கொட்டுகிறது அருவி.

ஹொகேனக்கல்! ஒகேனக்கல்! — எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம் — நீங்கள் சமஸ்கிருதப் பிரியரா அல்லது தூய தமிழ்க் காவலரா என்பதைப் பொறுத்து.

'ஹொகே' என்றால் 'புகை' — கன்னடத்தில். வேகமாய் வரும் காவேரி, பெரும் சப்தத்தோடு கீழே இறங்கிப் பாறைகளைத் தாக்க, புகை மாதிரி நீர்த் திவலைகள் மேலே கிளம்புவதால் 'ஹொகேனக்கல்' அதாவது புகையும் பாறைகள் என்று பெயர் ஏற்பட்டதாகச் சொன்னார்கள்.

ஹொகேனக்கல்லின் புகழ் சினிமா மூலம் ரொம்ப காலம் முன்பாகவே பரவி விட்டது. முதன் முதலில் இன்றைய தமிழக முதல்வர், இன்றைய இசைக் கல்லூரி முதல்வருடன் டூயட் பாடிப் பிள்ளையார் சுழி போட்டார். பிறகு அவரே • இந்நாள் கொ.ப.செ. வரை தொடர்ந்து டூயட் பாடியிருக்கிறார். அப்புறம் இந்த ஒகேனக்கல் மற்ற சினிமாக்காரர்களின் கண்களிலும் பட்டு படுபிஸியான 'லொகேஷன்' ஆகி விட்டது.

ஹீரோயினின் விக் வைத்த தலைமுடியைச் செயற்கையாய் முகர்ந்து மார்பில் சாய்த்துக் கொள்ளாத, டூயட் பாடிய படியே அவளைப் பாறைகளில் துரத்திப் பிடிக்காத ஹீரோக்களே இல்லை. ஹீரோயினிடம் வம்பு பண்ணி, ஹீரோவின் கோபமான தாக்குதலுக்கு ஆளாகி மார்பைப் பிடித்தபடி தண்ணீருக்குள் விழாத வில்லன்களும் அனேகமாய் இருக்க மாட்டார்கள்.

நாங்க
மோக
இருந்த
நதியா
என்று
பன்
தடுப்பு
தான்,
சௌக
கிறார்க
குற்றவ
ருந்து
கூடத்
போன்;
பெ
இன்னு
டத்தில்
பில் ந
படி, த

# எம்.ஜி.ஆர். முதல்





ஆளைப் புரட்டி வெளுக்கும் மாலிஷ்!



கடகட மீன்வறுவல் ரெடி!



பரிசலில் போகும் சுகம்...

...ன தினத்தில், ''நேற்றைக்கு
...டியா ஷூட்டிங்! நேற்றே வந்
...களும், பார்த்திருக்கலாமே!
...ப்படியொரு 'தளதள' அழகு!''

...டுக்குப் பன்னிரண்டில் கம்பித்
...ட்ட சிமெண்ட் தளம். அங்கே
இடங்களை விட குளிக்கச்
...ன்பதால் தளம் அமைத்திருக்
...காசகொசவென்று கும்பல்.
...பால, அருவி ஆகாசத்திலி
...வில்லை; அறுபது அடி உயரம்
...; ஆனாலும் கல்லடி படுகிறது
...ர்வு தண்ணீரில் நிற்கும்போது!
...க்கென தனிக் குளிப்பிடம்
...டியாகவில்லையாம். தரை மா
...ற காவேரியில், சேலையை மார்
... கட்டிக்கொண்டு, உட்கார்ந்த
...ர மொண்டு மொண்டு ஊற்றிக்

குளித்துச் சந்தோஷமடைய வேண்டியது தான்.

பஸ்ஸை விட்டு இறங்கி, அருவிப் பிரதேசத்தில் நுழையும்போதே, ''சார் மாலிஷ்... ஸ்பெஷல் மாலிஷ்'' என்று பாட்டிலும் கையுமாய்த்திரிகிற ஆசாமிகள் பிடித்துக்கொண்டு விடுவார்கள். தொடர்ந்து 'மாலிஷ் மகாத்மியம்' என்று ஒரு குட்டி லெக்சர். 'சரி' என்று சொல்லிவிட்டால், உடம்பில் சின்னதாய் ஒரு துணியை மட்டும் விட்டுவிட்டு, மற்றவைகளையெல்லாம் கழற்றி, ஆளைப் பாறையில் உட்கார வைத்து, பாட்டிலைக் கவிழ்த்து, உச்சந்தலையிலிருந்து, உள்ளங்கால் வரை எண்ணெயைத் தடவி ஊறப் போட்டு விடுவார்கள்; அப்புறம் கும்... கும்... என்று கும்மாங்குத்துக்கள். விரல்களில் 'சொடக்கு' எடுக்கிறார்கள். உடலை இந்தப் பக்கம், அந்தப் பக்கமாய்த் திருப்பி, ஒரு பதினைந்து நிமிஷத்துக்கு, கையிலிருப்

# மோகன் வரை



குளிக்கும் இடம்

பது மனித உடம்பு என்பதையே சுத்தமாய் மறந்துவிட்டு, களிமண்ணென நினைத்துப்பிசைந்தெடுத்து விடுகிறார்கள். மாலிஸ் பண்ணிக் கொள்ளவே வேண்டாம், பண்ணிக் கொள்பவர்களைப் பார்த்தாலே போதும், நம் உடல் வலிப்பது போன்ற பிரமை!

''உடம்பு வலிக்கலையா?'' என்றோம் மாலிஸ் சுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்த பெங்களூர்க்காரரான வேணுகோபாலிடம். ''சும்மா பார்த்துக்கிட்டு நின்னா இதன் பெருமை புரியாது சார்! சும்மா போட்டுப் பாருங்க ஒரு தடவை!'' என்றார் விவிதபாரதி விளம்பரம் ஸ்டைலில்.

''மாலிஸ் போட பொம்பளைங்க இருக்காங்களா?'' என்று மாலிஸ் போடும் நாகராஜனிடம் கேட்டோம்.

''என்னசார்! மெட்ராஸ்லமஸாஜ்பார்லர் இருக்குதே அந்த மாதிரி இடம் இதுன்னு நெனைச்சீங்களா?'' என்று கோபத்துடன் அவர் என்னை நெருங்கவே, ''அது இல்லீங்க, பொம்பளைங்க கூட மாலிஸ் போட்டுக்குவாங்களான்னு கேட்க வந்தோம்'' என்று சமாளிப்பதாக நினைத்துக் கொண்டு மேலும் உளறி வைக்க, அவர் கோபம் மேலும் அதிகரிக்க, என்னை மாலிஸ் போட்டு எலும்பை முறித்திருப்பார்... நல்லவேளை உடன் வந்த நண்பர்கள் இடைபுகுந்து அவரை ''மீன் வறுவல் சாப்பிடலாம் வாங்க'' என்று ஒரு மாதிரி சமாதானப்படுத்தி அழைத்துப் போய் விட்டார்கள்.

மீன் வறுவல் – சுடச்சுட... ஃப்ரஷ்ஷாய்!! நீர்வீழ்ச்சியிலிருந்து, வலைபோட்டுப் பிடித்து, மீன்கள் துள்ளித் துடிக்கக் கொண்டு வந்து, கண்ணெதிரே வறுத்தெடுத்து உப்பு, மசாலாப் போட்டுக் கொடுப்பது மீன் சாப்பிடுபவர் வாயில் நீர் ஊறச் செய்கிற விஷயம். மீன் சாப்பிடாதவர் மனத்திலே ஒரு மாதிரி அருவருப்பையும், வயிற்றிலே கடபுடாவையும் ஏற்படுத்துகிற சமாசாரம்.

ஆற்றின் மறுபக்கம் பாறைகள் நிறைந்து ரொம்ப இயற்கையாய் இருக்கவே, அக்கரையிலிருந்து அக்கறையாய் போட்டோ எடுத்தால், தூளாயிருக்கும் என்கிற எண்ணத்தில் பரிசலில் போக முடிவு செய்தோம்.

''பரிசல் கூலியைக் கேட்டதும், பரிசலிலிருந்து தவறி ஆற்றில் விழுந்து விட்டது போலவே உணர்வு! ஆனாலும் வாயுள்ள பிள்ளை பிழைத்துக் கொள்ளும் என்பது நிஜமாயிற்று. பேரம் பண்ணிக் கணிசமாகக் கூலியைக் குறைத்தோம்.

பரிசல்காரர் ஜாலியான பேர்வழி. ''இந்தப் பரிசல்லதான், சார், மம்பட்டியான் ஷூட்டிங் நடந்தப்போ, சரிதா வந்தாங்க'' என்றார். ''சரிதான்'' என்றேன். பத்திரிகைக்காரங்க என்றதும், ''கதை எல்லாம் எழுதுவீங்களா?'' என்று கேட்டுவிட்டு, ''என் அனுபவத்தை எல்லாம் கதையா எழுதிடுங்க சார்!'' என்றார். ''ஆகட்டும் நிச்சயம் எழுதுகிறேன்'' என்று பதில் சொன்னேன். 'மாட்டேன்' என்று கூற ஏது துணிவு? அதுவும் நேற்று கூட அந்த ஆற்றுச் சுழல் ஒரு பையனை இழுத்து மூழ்கடித்துக் கொண்டே போய்விட்டது என்பதைப் பரிசல் ஓட்டியே கூறக் கேட்ட பிறகு?

கறுப்புப் பாறைகள் கன்னாபின்னாவடிவங்களில் காணப்பட்டன. காலில் செருப்புடன் ஏறினால் வழுக்கிவிட்டன. செருப்பைக் கையில் எடுத்துக் கொண்டு ஏறினால் தாங்க முடியாத சூடு! எப்படியோ மூச்சிறைக்க ஏறி, ரொம்பக் கஷ்டப்பட்டுப் படம் பிடித்தோம். (அதனால் படங்கள் அழகாக அமைந்திருப்பதாக ஆசிரியருக்குக் கடிதம் எழுதி விடுங்கள் — ப்ளீஸ்!)

அருவிக் குளியல் ஒரு சுகானுபவம்! நேரம் போவதே தெரியாது. ஆனால் குளித்து முடித்ததும் ஏற்படுவது எமப் பசி. நான்–வெஜிடேரியன்காரர்களானால் கவலையில்லை. சுடச்சுட மீன் வறுவல் சாப்பிடலாம். சைவ உணவுக்காரர்கள் பாடு திண்டாட்டம்தான். இருக்கிற ஒரே தரமான ஓட்டல் சுற்றுலாத் துறையின் தமிழ்நாடு ஓட்டல்தான். எனவே அங்கு போனோம். ''சாப்பாடா? முன் கூட்டியே ஆர்டர் பண்ணியிருக்கீங்களா?'' என்றார்கள். நாங்கள் பரிதாபமாகப் பார்க்க அவர்கள் அதைவிடப் பரிதாபமாக எங்களைப் பார்த்துக் கைவிரித்தார்கள். நாங்கள் வயிற்றின்மேல் ஈரத் துணி விரித்தோம். சுற்றுலா அபிவிருத்தி என்று மத்திய அமைச்சர் முதல் மாநில அதிகாரி வரை அட்டகாசமாகப் பேசுவதோடு சரி. களைத்து வருகிறவர்கள் அந்த வார்த்தைகளால் வயிற்றை நிரப்பிக் கொள்ளவா முடியும்? அட, விருந்து வேண்டாம். அரை மணி அவகாசத்தில் ஒரு 'குவிக் மீல்' செய்து போடக் கூடாதா?

சனி, ஞாயிறில்தான் அசாத்தியக் கூட்டம் வருகிறது. அப்போது எந்த பஸ் எத்தனை மணிக்கு வரும், எப்போது புறப்படும் என்கிற வகைதொகை எல்லாம் கிடையாது. பஸ்களின் அட்டவணை – போர்டு ஏதும் இல்லை. பிள்ளைத்தாய்ச்சி போலப் பயணிகளைத் திணித்துக் கொண்டு வரும் பஸ் பிரசவிக்கிறது. மறுபடி கிளம்ப வேண்டுமானால் திணியத் திணிய கும்பல் ஏறினால்தான் உண்டு. அதுவரை பஸ் காத்திருக்கும். பஸ்ஸுடன் சேர்ந்து நாமும் காத்திருக்க வேண்டியதுதான்! இதுபற்றியும் சம்பந்தப்பட்டவர்கள் கவனித்தால் தேவலாம்தான்.

ஆனால் ஒன்று, நிஜமாகவே நம் தமிழக அரசு இந்த விஷயங்களைக் கவனித்துச் சரி செய்து விட்டால் காவேரித் தாயே ஆச்சரியத்தில் ஆழ்ந்து ஓடுவதையே மறந்து நின்றாலும் நின்று விடுவாள்!

**— எஸ். சந்திரமௌலி**

**மேலட்டையில்: ஒகேனக்கல் வண்ணப்படமும், தருமபுரி மாவட்டச் செய்திகளுக்கான மற்ற படங்களையும் எடுத்தவர்: மனோ.**

அனுராதா ரமணன் **15**



# நெருப்பாக நீ

இன்பாவினால் கண்களைத் திறக்க முடியவில்லை.... தூக்கமுமில்லாமல், மயக்கமுமில்லாமல் இரண்டுங் கெட்டானான நிலைமை.... முன் நெற்றியில் 'விண்'ணென்று வலி... மூக்கு, காது.... இப்படி எல்லா இடங்களிலும் ஜிவுஜிவுவென எரிச்சல்..... முழங்கால், இடுப்புக் கூடப் பாக்கியில்லை.

கண்களைத் திறக்க முடியாவிட்டாலும், வார்த்தைகள் காதில் விழத்தான் செய்கிறது...

''இப்ப எப்படியிருக்கு டாக்டர்?''

''ஒண்ணும் பயமில்லே. வேணுமானா, இன்னொரு தடவை நூறடி உசரத்துலேயிருந்து தூக்கிப் போட்டுப் பாரு... ரப்பர் பொம்மை மாதிரி எழுந்திருப்பா. அதெல்லாம் சில உடம்போட வாகு..... இல்லையின்னா, அத்தனை உசரத்துல இருந்து விழுந்ததுக்கு கையோ, காலோ பலப்பக் குச்சி மாதிரி உடைஞ்சிருக்கும்....''

நந்துவின் கேள்விக்கு டாக்டரின் இடக்கான பதில்....

அந்தக் கணமே, டாக்டரின் தோளைத் தட்டி, 'என்னைக் காப்பாற்றியது என் உடல் வாகு இல்லை மடையா.... ஒரு தேவதை' என்று கத்த வேண்டும் போல இருக்கிறது.

வாயைத் திறக்க விரும்பவில்லை....

அந்த அனுபவத்தை மனசுக்குள் கொண்டு வந்து திரும்பவும் அசை போடுகிறாள் அவள்.

ஊஞ்சலில் அவள் மட்டுமா ஆடினாள்.... அவள் கூட, இல்லை – அவளை மடியில் வைத்துக் கொண்டு யாரோ ஒரு பெண் அல்லவா ஆடினாள்....

யாரவள்....

முகம் நன்றாக நினைவிலிருக்கிறது... அடிக்கடி, இன்பாவினுள் அந்த முகம் அலை எழுப்பிய துண்டு.....

மஞ்சள் கலந்த சிவப்பு முகம். காதிலும், மூக்கிலும் வைரங்கள்... கழுத்து கொள்ளாத நகை... பாசிப் பச்சை நிறத்தில், அருவி மாதிரி துவளும் மைசூர் சில்க் புடைவை... சரக் கூந்தலை நுனி முடிச்சிட்டு, ஒரு சாண் மல்லிகையை அலட்சியமாய்ச் செருகிக் கொண்டு....

''ஊஞ்சல்லே ஆடலாமா குழந்தே....''

''ஊம்ஹூம்....

''ஏன்? பயம்மா இருக்கா.... நான்தான் இருக்கேனே.... உன்னைக் கெட்டிமாப் புடிச்சுக்கு வேன்... என்ன.... அம்மாடி, உசிர் என்ன, வெல்லக் கட்டியா!''

அவள், இன்பாவை – சின்னஞ் சிறு இன்பாவை இழுத்தணைத்து முத்தமிடுகிறாள். மார் போடு அணைத்துக் கொள்கிறாள்.

இன்பாவுக்கு மூச்சுத் திணறுகிறது. குரங்குக் குட்டி, தாய்க் குரங்கை கெட்டியாய்ப் பிடித்துக் கொள்வது போல – அவளை இறுக்கமாய்ப் பிடித்துக் கொள்கிறாள்.

''ஊஞ்சலே ஆட்டுடா....''

அவள் யாருக்கோ, கட்டளையிட..... ஊஞ்சல், மண்ணுக்கும் விண்ணுக்கும் புஷ்பக விமானம் போலப் போய் வர....

அவள், தன்னைக் கவ்விக் கொண்டிருக்கும் இன்பாவைப் பார்க்கிறாள். குழந்தையின் முகத்தில் பயம் மறைந்து, குதூகலம் எட்டிப் பார்க்கத் தொடங்கியதும் — இவளுக்கும் சந்தோஷம் தாங்கவில்லை.

''இன்னும்.... இன்னும்.... வேகமா ஆட்டுடா...''

காற்றைக் கிழித்துக் கொண்டு, அவளது குரல் ஒலிக்க.... ஊஞ்சலின் வேகம் அதிகரிக்கிறது.

அத்தனை நேரமும், ஏதோ ஒரு பயத்தில், அவளது மார்போடு ஒட்டிக் கொண்டிருந்த இன்பா — தன்னை மறந்து, இரு கைகளையும் கொட்டி ஆரவாரிக்க....

''ஐயோ.... குழந்தை....''

இன்பா தரையை நோக்கி நழுவுவதைக் கண்டவள் அலறிக் கொண்டே ஊஞ்சலிலிருந்து குதிக்க....

அதற்குப் பிறகு என்ன நடந்தது?

இன்பாவிற்கு அதிக அடியில்லை. அவளுக்குத்தான் வலது கை எலும்பு முறிவு....

''என் கண்ணே, உனக்கு ஒண்ணும் ஆகலியே... கடவுள்தான் உன்னைக் காப்பாத்திஞர். என் செல்லம்.... பட்டு..... தங்கக் கிளி.

உருப்படியாக இருந்த ஒற்றைக் கையினுல் அவள், தன்னை இழுத்து நெஞ்சோடு சாய்த்துக் கொஞ்சுவது போல ஒரு கற்பனை.

'கற்பனையா.... கற்பனையேதானு? நிஜமில்லையா....'

'ஒருவேளை, தாயில்லாக் குறைதான் என்னை இப்படியெல்லாம் நினைக்க வைக்கிறதோ?'

இன்பாவின் மூடிய விழிகளில் மெல்லிய தாய் ஈரம் படருகிறது....

'ஊம்ஹூம் அழக் கூடாது. எந்த நேரத்திலும்.... எத்தனை துயர் வந்தாலும்.... அழக் கூடாது!'

— இது அவளை வளர்த்த மகராசி சொல்லிக் கொடுத்த மந்திரம்....

சின்ன வயதில் தொட்டதெற்கெல்லாம் பயந்து அலறிய இன்பா, இப்பொழுதெல்லாம் அழுவதே இல்லை.

என்றாவது தன்னை வளர்த்து ஆளாக்கிய அம்மாவை நினைக்கும்போது நெஞ்சு கசியும். ஆனுலும் கண்கள் சுரக்காது....

இப்பொழுது ஏதோ, நினைவில் தங்கிப் போன, ஓர் உருவத்தின் பாசம் மிகுந்த ஸ்பரிசம்வேண்டி, அவளது விழிகள் சில்லிட்டன; அவளுக்கே ஆச்சரியமானதாய்....

நந்து, அவளது கன்னத்தை, மிருதுவாய்த் தொடுகிறான்.

''வலி ரொம்ப ஜாஸ்தியா இருக்கா இன்பா?''

அவள் 'இல்லை' என்பது போலத் தலையசைக்கிறாள். ஆனுலும் கண்களைத் திறக்கவில்லை.

இன்னமும் கண்களுக்குள் அந்த உருவம் இருப்பது போன்றதொரு பிரமை....

''இம்பாம்மா, அந்த ஊஞ்சலைப் பார்த்துட்டு ஓடினப்பவே எனக்குப் 'பகீர்'னு ஆகிப் போச்சுங்க சின்னய்யா''.

''ஏன் மாது?''

நந்துவின்கேள்விக்கு, சற்றுநேரம்மௌனமாயிருந்த மாதையன் தனது குரல், அந்த அறையை விட்டு வெளியே கேட்காத வண்ணம் சொல்கிறான்.

''அந்த ஊஞ்சல்லே பெரியம்மா உட்கார்ந்துகிட்டு வீசி வீசி ஆடுவாங்க.... அதுவும் ஐயாவுக்கும் அம்மாவுக்கும் சண்டை வலுத்துச்சுன்னு, பெரியம்மா, என்னை விட்டு வண்டியக் கட்டச் சொல்லி, தோப்புப் பங்களாவுக்கு வந்திருவாங்க. அப்புறம், நாள் முழுக்க இந்த ஊஞ்சல்தான். சாப்பாடு, தூக்கமில்லாம.... வர்றப்பவே உங்க மூணு பேரையும், இன்னும் ஊர்க் குழந்தைங்க அத்தனை பேரையும்கூட்டிட்டு வந்திடுவாங்க. தோப்பு ரெண்டு படும். மாம்பிஞ்சு எல்லாம் பசங்களாலே காலியாகியிருக்கும். கவலையே



படமாட்டாங்க....''

''..............''

''இப்பக்கூட எப்பவாவது தோப்புப் பங்களாப் பக்கம் போனு, தோட்டக்காரனும், அவன் பெண்டாட்டியும் சொல்லுவாங்க... காத்தடிக்காமயே அந்த ஊஞ்சல் வெத்து வெளியில சில சமயம் ஆடுது மாது. யாரோ 'தொப்'புனு ஊஞ்சல்லேயிருந்துவிழுறமாதிரி இருக்கு. ஐயோ... குழந்தை ன்னு கத்தற மாதிரி இருக்கு. ஜமீன்தார்கிட்டச் சொல்லி அந்த ஊஞ்சலே அறுத்துப் போடச் சொல்லுன்னு புலம்புவாங்க.....''

''இதை ஏன் நீ முன்னாடியே சொல்லலே மாது?''






தருமபுரி முனிசிபாலிடியில் 'மனுச் செய்து, பணம் செலுத்திய மூன்று நாட்களுக்குள் தண்ணீர் இணைப்புக் கொடுக்கப்படும்' என்ற ஓர் ஆச்சரியமான அறிவிப்பு தொங்கிக் கொண்டிருந்தது. எந்த ஊருக்குப் போனாலும் குடி தண்ணீர்ப் பிரச்னையைக் கேட்டுக் கேட்டு அலுத்துப் போன நமக்கு இந்த அறிவிப்பு உண்மையாகவே ஆச்சரியம் கொடுத்த ஒன்று! ஆனால் கடைசியில் விசாரித்த போது, விஷயம் வெளிப்பட்டது! "அந்த அறிவிப்பைப் போய்ப் பெரிசா எடுத்துக்கிறீங்களே ஸார். அதெல்லாம் சும்மா ஒரு கண்துடைப்பு. பணத்தை முனிசிபாலிடிக்குமட்டும்கட்டினால்போதாது. சம்பந்தப் பட்டவர்களையும் 'கவனித்தால்'தான் இந்த மூன்று நாள் அறிவிப்புக்குப் பொருத்தமாக இணைப்புக் கிடைக்கும்" என்றார் தருமபுரிவாசி ஒருவர். எப்படியோ தருமபுரியில் குடிதண்ணீர்ப் பிரச்னை இல்லை.

நந்துவின் குரலில் லேசான ஆத்திரம்.

"எங்கே.... நீங்கதான் பெரியம்மா பேச்சை எடுத்தாலே கோவிச்சுக்கறீங்களே.... போதாக்குறைக்கு பட்டணத்துல படிச்சிட்டு வந்தவங்க. இதையெல்லாம் சொன்னா, ஆவியாவது, பிசாசாவதுன்னு என்னைக் கேலி செய்வீங்க."

இன்பா, மூச்சு விடுவதைக்கூட மறந்து அத்தனையையும் கேட்டுக் கொண்டிருக்கிறாள்....

நெற்றியில் பொட்டுப் பொட்டாய் வியர்க்கிறது....

அவளது கற்பனையில் கண்ட சம்பவம் பொய்யில்லை. அப்படியானால்....?

மங்களாம்பாளின் ஆவிதான் தன்னை, மடியில் வைத்தபடி ஊஞ்சலில் அமர்ந்து ஆடியதா?'

ஆவி..... இப்படி ஒரு விஷயம் இருக்கிறதா?

இது பற்றி, அவள் அப்பாவிடம் நிறையவே விவாதித்திருக்கிறாள்.

அதுவும், சின்ன வயசில், பள்ளிக்கூட சினேகிதி ஒருத்தி, தரையில் ஏ, பி, ஸி, டி என்று ஆங்கில எழுத்துக்களை எழுதி, ஒரு மெழுகுவர்த்தியைக் கொளுத்தி, அதன் மீது தம்ளரைக் கவிழ்த்து மூடி, தம்ளரை ஒற்றை விரலால் தொட, தம்ளர் கண்டமேனிக்கு அங்கும் இங்குமாய் ஓடி, ஒவ்வோர் எழுத்தையும் தொட்டுவிட்டு வந்தது.

இதுபற்றி அவள், அப்பாவிடம் சொன்ன போது, அவர் சிரித்தார்.

"எல்லாத்துக்கும் மனசுதான் காரணம்... எப்படி கடவுள் உண்டு, இல்லைன்னு ரெண்டு பிரிவு இருக்கோ, அது மாதிரிதான் ஆவி உலகம்னு ஒண்ணு உண்டு, இல்லைன்னு ரெண்டு விதமாவும் பேசிக்கிறாங்க. என்னைக் கேட்டா, 'அப்படியொரு விஷயமே இல்லை'ன்னுதான் சொல்லுவேன்...."

"அப்போ செத்ததுக்கு அப்புறம் உயிர் எங்கே போறது?"

"டார்ட்டரி செல் தீர்ந்தவுடனே டேப் ரிகார்டர் ஏன் நின்னுடறது? டார்ச் லைட் ஏன் எரியமாட்டேங்குது? அப்ப இத்தனை நேரம் இதை வேலை செய்ய வச்ச சக்தி எங்கே? மூடியைக் கழற்றிப் பார்க்கறோம்... பாட்டரி அப்படியேதான் இருக்கு. ஆனா அதோட சக்தி தீர்ந்து போச்சு. அப்படித்தான் இந்த உடம்பும்! சக்தி தீர்ந்ததும் கட்டையை நீட்டிடறது. 'சக்தி எங்கே போச்சு'ன்னு கேட்கறதோ, இல்லே அந்த சக்தி, ஆவி வடிவமா டார்ச் லைட்டையும், டேப் ரிகார்டரையும் சுத்திச் சுத்தி வர்றதாச் சொல்றதோ.... பைத்தியக்காரத்தனம்...."

"அப்ப போன ஜென்மத்து நினைவு எல்லாம்.... சிலருக்குத் திரும்பி வர்றதே.... அதுக்கு என்ன பதிலைச் சொல்றீங்களாம்..."

"அதெல்லாம் வெறும் மனப்பிரமை.... அவ்வளவுதான் சொல்ல முடியும்..."

இன்பாவின் அப்பா, அழுத்தந்திருத்தமாய்ச் சொல்லுவார்.

இன்று அந்த அப்பாவைப் பார்த்து உடனடியாக நடந்ததைச் சொல்ல வேண்டும் போல இருக்கிறது.

அது மட்டுமில்லை.

தன் மூளைக்குள் அவ்வப்போது அலங்காரமாய், அழகின் சொரூபமாய், வளைய வருபவள் யார்?

'அவளுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?'

'அவள்தான் இந்த வீட்டு எஜமானியான மங்களாம்பாளா?'

'அப்படியென்றால் இவளை நான் எங்கே, எப்பொழுது பார்த்திருக்கிறேன்....'

'மங்களாம்பாள்தான் என் கனவிலும், நினைவிலும் வருகிறாளென்றால் மங்களாம்பாள் எனக்கு என்ன உறவாக வேண்டும்?'

குழந்தையே பெறாதவள் அவள். குழந்தையிலேயே தாயை இழந்தவள் நான்...

'நான்' — யார்?

'அவள்' — யார்?

அதற்கு மேலும் மூளையைக் கசக்க முடியாத இன்பா, சோர்வுடன் கண்களை மூடிக் கொள்ள....

கல்யாணக் கூடத்தில் ஜமீன்தார் லோகநாதனை டாக்டரும், ஸ்டேஷன் மாஸ்டருமாய் நார் நாராய்க் குதறிக் கொண்டிருக்கிறார்கள்.

(தொடரும்)

சூரியன் மேகப் பொதிகளை அநாவசியத்திற்கு அத்து மீறிக் கொண்டு இருந்தான்.

உலகமே சோகத்தின் மடியில். பீதியும் அதில் சரிபாதி.

அந்த ஆராய்ச்சிக் கூடமும் விதிவிலக்கின்றி விசனத்தில் மூழ்கிக் கிடந்தது. எங்கும் மௌனமாக உலவிய நிருபர்களின் பாவனைகளில் ஆத்திரம் கலந்த அனுதாபம்.

நடுவே, நொறுங்குண்ட மனத்துடன் அமர்ந்திருந்தார் அந்த பழுத்த விஞ்ஞானி. அவர் உள்ளம் குற்றவுணர்வால் குலைந்திருந்தது.

''கொஞ்ச நேரத்துக்கு முன்னால ஜப்பான்ல அணுகுண்டு போட்டுட்டாங்க தெரியுமா?'' ஆத்திரத்தோடு ஒரு நிருபர் கேட்டார்.

இந்தப் பதில் யாருக்கும் திருப்தி அளிக்கவில்லை. ''இது பொறுப்பான பதிலாத் தெரியலையே?''

''ப்ளீஸ், என்னைக் கொஞ்சம் தனியா விடுங்க. நான் உலக நன்மைகளை முன்னிட்டுதானே அந்த ஃபார்முலாவை வெளியிட்டேன். சிலர் அதைத் தவறான வழியில பயன்படுத்தினா நான் என்ன செய்ய முடியும்?''

அமைதி.

''ஆனா இதே எனது கண்டுபிடிப்புத்தான் பிற்காலத்துல உலகத்தையே காப்பாற்றப் போகுது. அதுல எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு'' இதை அவர் வாய்விட்டுக் கூறவில்லை, மனதுக்குள் திடமாக நம்பினார்.




அவர் பார்வையால், ''தெரியும்.''

''இதுக்குள்ள ஆயிரக் கணக்கான பேர் செத்திட்டாங்களாம். ஏகப்பட்ட அழிவு ஏற்பட்டிருக்கு சார். இன்னுங்கூட ஏற்படலாமாம். அதுவும், பல தலைமுறைகளுக்கு பாதிப்பு இருக்கும்னு சொல்றாங்க.''

''அதுவும் தெரியும்'' — இந்தப் பதிலும் பார்வையால்தான்.

''இத்தனைக்கும் காரணம், நீங்க கண்டுபிடிச்ச சக்திப் பெருக்கம் பற்றிய ஃபார்முலா தானே?''

இரும்புப் பாகில் விழுந்துவிட்ட வேதனையுடன் நிமிர்ந்தார் விஞ்ஞானி. ''நோ.... நோ.....''

அந்தச் சம்பவம் நிகழ்ந்து ஒரு நூற்றாண்டு நிறைவுறப் போகின்றது.

'உலக சமாதான மாநாடு' என்ற எழுத்துக்கள் தங்க நிறத்தில் தகிக்க, முன்னால் இருந்த பிரும்மாண்டமான மேடையில் பல உலகத் தலைவர்கள் வீற்றிருந்தனர்.

பல நாடுகளைச் சேர்ந்த விஞ்ஞானிகள் இணைந்து தயாரித்த அறிக்கை படிக்கப்பட்டது.

''அன்று ஜப்பானில் போடப்பட்ட அணுகுண்டைப் போல பல ஆயிரம் மடங்குகள் சக்தி வாய்ந்த அணு ஆயுதங்கள் உலக நாடுகளெங்கும் இன்று நிறைந்து கிடக்கின்றன. அவற்றால் உலகைச் சுமார் தொண்ணூறு

முறை அழிக்க முடியும்.''

ஆச்சரியமும், அச்சமும் கேட்டவர்களிடையே நிலவியது.

''அதில் ஒரு சிறு பகுதியை மட்டும் வெடிக்கச் செய்தாலே போதும். ஏற்படும் விளைவு கொடூரமானது.''

எப்படி?!

''காற்று மண்டலத்திலுள்ள துகள்களில் தொடர்ச்சியாக அணுக் கருச் சிதைவு நிகழ ஆரம்பித்துவிடும். விளைவாக, மிகப் பெரும் புழுதிப் புயல் உருவாகி, உலகையே மூடி விடும். இதனால், கதிரவன் மறைக்கப்பட்டு ரத்தச் சிவப்பில் தோன்றும். சூரிய ஒளி பெருமளவு தடுக்கப்படுவதால் உலகில் வெப்ப நிலை குறைந்து ஒரு பனி யுகமே ஏற்பட்டு விடும். எனவே, மித மிஞ்சிய குளிரைத் தாங்க இயலாமல் உலகில் சஞ்சரிக்கும் உயிரினங்கள் யாவும் முழுமையாக அழிந்து விடும் — மனித இனம் உட்பட. எனவே, துரிதமாகச் சமாதானப் பணிகளில் ஈடுபட்டு......''

திக்பிரமை பிடித்தவர்களாக அமர்ந்திருந்தனர் மாநாட்டு உறுப்பினர்கள்.

வெளியே சூரியன் மந்தகாசமாகச் சிரித்துக் கொண்டு இருந்தான்.

நவீனத்தனமான அந்த அறையில் சுமார் நாற்பது குழந்தைகள் கவனித்துக் கொண்டு இருந்தனர். அனைவரும் பத்து வயதுடையவர்களே. அதற்குச் சாட்சியாக நெற்றியில் முத்திரை!

எதிரே முப்பரிமாண விவி திரை ஒளிர்ந்தது. ''நல்வரவு குழந்தைகளே. நமது மாட்சிமை மிக்க அரசாங்கம் இலவசமாக அளிக்கும் சக்தி அலைகளை ஏற்றிக் கொண்டீர்களா?''

''ஓ.....!''

''நன்று. இன்றைய அறிவுப் பணிக்காக நமது அரசுப் பெரியவர்களால் குறிக்கப்பட்டுள்ள பாடப்பகுதி 'விண்மீன்களின் விநோத வாழ்க்கை' ஆகும். இதனைக் கவனிக்க வேண்டியது உங்களின் கடமை அல்லவா?''

பிள்ளைகள் ஆர்வமாக நிமிர்ந்து உட்கார்ந்தனர். பாடத்தில் உற்சாகம் அற்ற சில குழந்தைகள் சாலையில் பணியிடங்களுக்கு அவசரமாகச் சென்று கொண்டிருந்த இயந்திர மனிதர்களைச் சன்னல் வழியாக வேடிக்கை பார்த்தனர்.

''இவர்தான் ஹெச். என். ரஸ்ஸல். பத்தொன்பதாம் நூற்றாண்டு விஞ்ஞானி. விண்மீன்களைப் பற்றி நவீன முறையில் ஆராய்ந்தவர்களில் முக்கியமானவர்.''

''இவர் நிஜ மனிதரா, அல்லது, இயந்திர மனிதனா?'' ஒரு குழந்தை சந்தேகித்தது.

விவி லேசாகச் சிரித்தது. ''இவர் நிஜ மனிதர்தான். அப்போது இயந்திர மனித வர்க்கமே கிடையாது.''

''உண்மையாகவா? நம்பவே முடியவில்லையே?''

''சரி, நாம் பாடத்திற்கு வருவோம். விண்மீன் எப்படித் தோன்றுகிறது தெரியுமா? இந்தப் பிரபஞ்சத்தில் எல்லா இடங்களும் தூசித் துகள்களால் நிரம்பிக் கிடக்கின்றன. அவை தங்களுக்கிடையே உருவாகும் பொருட் கவர்ச்சியினால் இணைந்து, இறுகி உருவில் பெருக்கின்றன. இறுக்கத்தால், ஏற்படும் நெருக்கம் காரணமாக அந்தத் தூசி உருண்டைகளில் அணுச் சிதைவு ஏற்பட்டு சக்தி பீறிட, ஒவ்வொன்றும் ஒரு விண்மீனாக உருவெடுக்கின்றன. இதற்கு நிறைய நேரடிச் சான்றுகள் உள்ளன.''

''இதைப் பற்றி நான் ஏற்கெனவே கேள்விப்பட்டு இருக்கின்றேன்'' எனக் குதித்தது ஒரு குழந்தை.

''எப்படி?''

''என் வீட்டு ரோபாட் பணிப் பெண் கூறியது.''

''அப்படியா? சந்தோஷம். இப்படி உருவான விண்மீன் பல கோடி ஆண்டுகளுக்கு மஞ்சளாகவும், பின் நீலமாகவும் ஒளிரும். அப்போது அவற்றிற்கு வாய்ப்பும், அதிர்ஷ்டமும் இருந்தால் கிரகக் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளும் என்பது தனிப் பாடம். விண்மீனில் எரிபொருள் தீரும்போது, அது சுருங்கி விரியும். விளைவாக, அது பல மடங்குகள் அளவில் பெருத்து செந்நிறமாக ஒளிரும். அப்போது அதன் வெப்பநிலையும் பல மடங்குகள் அதிகரிக்கும். இந்நிலையில் விண்மீன்களுக்குச் சிவப்பு பேரரக்கன் (**Red Super Giant**) என்று பெயர்.''

அறிவுப்பணி சில நிமிடங்கள் நிறுத்தப்பட்டு, குழந்தைகளுக்குச் சுவை பானம் அளிக்கப்பட்டது.

பிறகு விவி திரை தொடர்ந்தது. "இந்த நிலையை நமது நட்சத்திரமாகிய சூரியன் அடையும்போது, அதனால் உருவாகும் வெப்பப் பெருக்கம் புதன் கிரகத்தை ஆவியாக்கிவிடும். உஷ்ணம் தாங்காமல் உலகில் வாழும் அனைத்து உயிரினங்களும் பூண்டோடு அழிந்துவிடும்."

குழந்தைகள் லேசாக நடுக்கமுற்றன.

"ஆனால், சூரியன் சிவப்புப் பேரரக்கனாகும் நிலை தற்போதைக்கு இல்லை. அதற்கு இன்னும் பல கோடி ஆண்டுகள் உள்ளன. எனவே, இப்போதைக்கு நமக்கு எந்த ஆபத்தும் கிடையாது."

நிம்மதி.

"ஆனால், நமது பின் சந்ததியினர்தான் மிகவும் பரிதாபத்துக்கு உரியவர்கள். சூரியன் சிவப்புப் பேரரக்கனாகும்போது அவர்கள் உயிர் தப்பிக்க என்ன செய்வார்களோ தெரியவில்லை."

சில குழந்தைகள் அவர்களுக்காகப் பரிதாபப்பட்டன.

அந்த பிரும்மாண்டமான அரங்கு பூமியின் மேல் மட்டத்திலிருந்து பல நூறு அடிகள் ஆழத்தில் இருந்தது.

இப்படி எலிகளைப் போல வளை தோண்டி வாழும் நிலை மனித இனத்திற்குத் தற்போது பழகிவிட்டது.

இல்லாவிட்டால் அந்த அரக்க குணம் படைத்த சூரியனின் அனல் வீச்சிலிருந்து தப்பிப்பது எப்படி?

பாதுகாப்புக் கவசமின்றி மேற்பரப்பிற்குப் போனால், சில நிமிடங்களில் கருகிச் சாக வேண்டியதுதான்.

அரங்கினுள்ளே விஞ்ஞானிகள் கவலையுடன் கூடி இருந்தனர்.

வெளி முற்றத்தில் சிலர் ஆர்பாட்டத்தில் ஈடுபட்டிருந்தனர். "இருப்பவர்களுக்குவேலை தர இயலாத அரசாங்கமே. பிண உயிர்ப்பைத் தடை செய்."

உலகத் தலைவர் உற்சாகம் குன்றியவராக அரங்கினுள்நுழைந்தார். ஆர்ப்பாட்டக்காரர்கள் அப்புறப்படுத்தப்பட்டனர்.

மரியாதைக்காக எழுந்து நின்று அமர்ந்தனர் விஞ்ஞானிகள்.

பின் உலகத் தலைவர் உருக்கமாகப் பேசினார்: "அன்பு நண்பர்களே! நாம் இன்று விஞ்ஞானத்தின் உச்சியில் இருப்பது என்னவோ உண்மைதான். பூமியில் தோன்றும் இயற்கைச் சீற்றங்கள் இன்று நம் கட்டுப்பாட்டில். ஆனால், இந்தச் சூரியனின் கோரத்தை வெற்றி கொள்ள முடியவில்லையே?"

சிறிது நேர மௌனம்.

உலகத் தலைவர் தொடர்ந்தார், "சூரியன் கொஞ்சம், கொஞ்சமாகச் சிவப்புப் பேரரக்கனாக மாறி வருகின்றது. விளைவாக வெப்பம் அதிகரித்துப் பலரின் உயிர்களைக் குடித்துவிட்டது. இதற்குத் தகுந்த எதிர் நட

தேர்ந்தெடுக்கப்பட்ட நகராட்சி, ஊராட்சித் தலைவர்களெல்லாம், 'எங்களிடம் பணமே இல்லை' என்று பேட்டிகளும் அறிக்கைகளும் கொடுத்துக் கொண்டிருக்கும்போது, "பணம் ஒரு பிரச்னையே இல்லை ஸார்!" என்று எங்களிடம் ஒரு மாறுதலாக, ஓசூர் தேர்வு நிலைப் பேரூராட்சித் தலைவர் மனோகரன் சொன்னபோது, சந்தோஷமாக இருந்தது.

"எங்களுடைய பிரச்னையெல்லாம், அரசாங்கத்தின் நடைமுறைத் தாமதங்கள்தான். எதாவது கட்டடம் கட்ட வேண்டுமென்றாலோ, அல்லது மற்ற திட்டங்களை நிறைவேற்ற வேண்டுமென்றாலோ, இன்ஜினியர் உதவி தேவை. ஆனால் எங்கள் பேரூராட்சியில் இன்ஜினியர் என்ற பதவியே கிடையாது. ஓசூர் ஊராட்சி ஒன்றியத்தில்தான் இன்ஜினியர் உண்டு. அவருக்கு எங்கள் தேர்வு நிலைப் பேரூராட்சி மட்டுமா? எத்தனையோ கிராமங்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஆக தாமதம் தவிர்க்க முடியாததாகிவிடுகிறது!"

"இங்கு குடி தண்ணீருக்குப் பெரும் பிரச்னை போலிருக்கிறதே?"

"ஓசூரைப் பொறுத்தமட்டில் ஒன்று சொல்கிறேன். இது ஒரு திட்டமிடப்படாத

# ஓசூர் ஒரு

நகரம். திடீரென்று வளர்ச்சியடைந்துவிட்டது. அதனால் குடி நீர், குடியிருக்க வீடு என்று எல்லாமே பிரச்னைதான். தென்பெண்ணை ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதாக ஒரு திட்டம் இருந்தது. ஆனால் அது சாத்தியமில்லை என்று தெரிய வந்தது. அப்புறம் கெலவரப்பள்ளியில் ஓர் அணை கட்டித் தண்ணீர் கொண்டு வரலாமென்றால், அணை பாதி கட்டிக் கொண்டிருக்கும்போதே தன் நிலம் பாதிக்கப்படுவதாக ஒருவர் கேஸ் போட்டிருப்பதால் அணை வேலை பாதியில் நிற்கிறது!"

"ஓசூரை "கொசூர்" என்று சொல்லலாம் போலிருக்கிறதே?"

"எங்கள் பணியாளர்கள் தொடர்ந்து மருந்தடித்துக் கொண்டுதான் வருகிறார்கள். பஸ் ஸ்டாண்டின் முன்புறம் உள்ள கால்வாய் கொசுப் பண்ணையாகவே இருக்கிறது என்பது உண்மைதான். அதனால் அந்தக் கால்வாயையே கான்க்ரீட்டால் மூடினால் என்ன என்று யோசித்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் அதைச் சரி செய்துவிடுவோம். மேலும் அதற்கும் பஸ் ஸ்டாண்டுக்கும் இடைப்பட்ட இடத்தில் ஒரு பார்க் அமைக்கப் போகிறோம். குண்டும் குழியுமாக இருக்கும் பஸ் ஸ்டாண்டையும் செப்பனிடப் போகிறோம். ஆக திட்டங்கள் எல்லாம் இருக்கின்றன! ஆனாலும் இத்தனை பெரிய

# திட்டமிடப்படாத நகரம்


○ மனோகரன்

நகரத்தில் குப்பை எடுக்க ஆறே ஆறு வண்டிகள்தான் இருக்கின்றன என்றால் நகரம் எப்படிச் சுத்தமாக இருக்கும்? எனவே விரைவில் ஒரு டிராக்டரும் டிரெய்லரும் வாங்க வேண்டும்!''

— இப்படியாகச் சொல்லிக் கொண்டே போகிறார் மனோகரன். கோஷ்டிப் பூசல் காரணமாகப் பஞ்சாயத்துத் தேர்தலில் சுயேட்சையாக நின்று வெற்றி பெற்றாலும் மனோகரன் இ. காங்கிரஸ்காரர்தான். பி. ராமச்சந்திரனுக்கு (தற்போது கேரள கவர்னர்) மிகவும் வேண்டியவர்!

''இருபத்து நான்கு லட்சம் ரூபாய் வருட வருமானம் உள்ள எங்கள் பேரூராட்சிக்கு, எட்டரை லட்சம் ரூபாய் நிர்வாகச் செலவுகளுக்கே போய்விடுகிறது. தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் மட்டும் எங்களுக்கு ஆறு லட்சம் ரூபாய் வீட்டு வரி பாக்கி என்றால் எங்களுக்கு வர வேண்டிய வரி பாக்கி எவ்வளவு இருக்கும் என்று நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்!'' என்று கூறிய மனோகரன், ''அடுத்தமுறை நீங்கள் இங்கே வரும்போது பல மாறுதல்களைப் பார்ப்பீர்கள்'' என்றார் நம்பிக்கை தொனிக்கும் குரலில்!

மனோகரனைச் சந்தித்துவிட்டு நாங்கள் வெளியே வந்தபோது, 'லேலண்ட் ஊழியர் நலச் சங்க'த்தினரும், 'ராஜீவ் காந்தி நற்பணி மன்ற'த்தினரும் ''நீங்கள் இன்னும் சில இடங்களைக் கட்டாயம் பார்க்கத்தான் வேண்டும்!'' என்று சில இடங்களுக்கு அழைத்துச் சென்று குறைகளைக் காட்டினார்கள். அவற்றில் சில:

●● ஆயிரம் ஃப்ளாட்டுகளைக் கொண்ட தமிழ்நாடு வீட்டு வசதி வாரியக் குடியிருப்பில் இன்னும் 160 ஓனர்ஷிப் ஃப்ளாட்டுகளுக்கு யாரும் குடிவரவில்லை. காரணம், அந்த ஃப்ளாட்டுகளில் வசதிகள் போதாது. வாடகையும் அதிகம். காலியாக இருப்பதால் இரவு நேரங்களில் அவற்றில் என்னென்னவோ நடந்து கொண்டிருக்கின்றன என்பது மட்டுமல்ல; லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள அவற்றுள் சிலவற்றில் ஜன்னல் கதவுகளும், கதவுகளும் உடைக்கப்பட்டுக் குட்டிச் சுவர் போலப் பாழடைந்து கொண்டும் வருகின்றன.

●● ஆரம்பத்தில் இரண்டாயிரத்து ஐந்நூறு ஊழியர்கள் இருந்தபோது, இ.எஸ்.ஐ. மருத்துவமனையில் நியமிக்கப்பட்ட மூன்று டாக்டர்கள்தான் இப்போது ஊழியர்களின் எண்ணிக்கை பத்தாயிரத்தைத் தாண்டிய நிலையிலும் மருத்துவம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால் டாக்டர்களுக்குத்தான் பஞ்சம் என்பதில்லை; அந்த இ.எஸ்.ஐ. மருத்துவமனையில் மாத்திரைகளைப் போட்டுக் கொடுப்பதற்கு சிறுசிறு காகிதப் பைகளுக்குக்கூடப் பஞ்சம். அதனால் மாத்திரைகளை நோயாளிகளின் கைகளிலேயே தந்து கொண்டிருக்கிறார்கள். நாங்கள் கேட்டபோது, அதுமாதிரிப் பைகள் வாங்குவதற்கெல்லாம் ரூல்ஸ் இடங் கொடுக்கவில்லை என்று சொல்லிவிட்டார்கள்!

●● ஓசூரில் காஸ் விநியோகம் செய்யும் உரிமை 'ஜெயந்தி எண்டர்பிரைஸஸ்' என்ற ஏஜென்ஸியிடம்தான் உள்ளது. அவர்கள் காஸ் சிலிண்டர்களை தமிழ்நாடு வீட்டு வசதி வாரியக் குடியிருப்பிலுள்ள ஒரு ஃப்ளாட்டிலேயே அடுக்கி வைத்திருக்கிறார்கள். 'குடியிருக்கும் பகுதியில் இப்படி காஸ் சிலிண்டர்களை அடுக்கி வைப்பது ஆபத்தாயிற்றே? ரூல்ஸ்கூட அனுமதிக்காதே?' என்று மற்றவர்கள் கேட்டபோது, 'கை' சின்னத்தைக் காட்டி அவர்களை அடக்கிவிட்டாராம். நாங்கள் அந்த ஏஜென்ஸி உரிமையாளரைச் சந்தித்துக் கேட்டபோது, ''எங்கள் கொடவுன் ரொம்ப தூரத்தில் இருக்கிறது. அங்கிருந்து சிலிண்டர்களைக் கொண்டு வந்து சப்ளை செய்தால் ரொம்பவும் தாமதமாகும். அதனால்தான் — மக்களுக்குத் துரிதமாக சப்ளை செய்வதற்காகத்தான் வீட்டு வசதி வாரியக் குடியிருப்பிலேயே சிலிண்டர்களை அடுக்கி வைத்திருக்கிறோம்!'' என்றார்.

●● இப்படி நாங்கள் ஓசூர் நகர வீதிகளில் சுற்றிக் கொண்டே வந்தபோது ஒரு வீதியில், ஒற்றை விரலால் சுட்டிக் காட்டிய படி அண்ணா சிலை. எதைச் சுட்டிக்காட்டுகிறார் அண்ணா என்று நாங்கள் சென்று பார்த்தபோது எதிரே சாராயக் கடை! மூச்சுக் காட்டாமல் வண்டியேறிவிட்டோம்!



அருள்வாக்கு

துஷ்கார்யத்தை ஸத்கார்யத்தால் ஸரி செய்கிறாற்போல, கெட்ட நினைப்பை நல்ல நினைப்பால்தான் ஸரி செய்ய முடியும். இங்கேதான் அன்பு வருகிறது. நல்ல எண்ணங்களிலெல்லாம் தலைசிறந்தது அன்புதான். இந்த அன்பை ஸமஸ்த ஜீவராசிகளிடமும் செலுத்த வேண்டும். அத்தனை ஜீவராசிக்கும் மூலாதாரமான பரமாத்மாவிடம் செலுத்தி பக்தி செய்ய வேண்டும். மூலத்திடம் அன்பு (பக்தி) செய்யாமல் அதிலிருந்து வந்தவற்றிடம் மட்டும் செய்யப் பார்த்தால் அது ஸரியாய் வராது. அதனால் ஈச்வர பக்தி அத்யாவச்யம். மனஸ் ஜீவனுக்குப் போடுகிற தப்பான எண்ணக் கட்டை எடுத்துப் போடுவதற்கு இதுதான் வழி செய்யும்.

அதாவது மனஸ், தான் பின்னே நின்று கொண்டு சரீரத்தை முன்னே விட்டுச் செய்விக்கிற கர்ம பந்தம் மட்டுமே ஸத்கர்மாவினால் போகும். மனஸின் நேர் பந்தமான எண்ணத்தின் பந்தம் பக்தியினால்தான் போகும். பக்தியும் எண்ணம்தான், மனஸை வைத்துக் கொண்டு அதனால் பண்ணுவதுதானென்றாலும், எப்படி சாஸ்த்ர கர்மா பழைய கர்மக் கட்டை அவிழ்க்கிற கட்டாயிருந்ததோ, அப்படியே இதுவும் எண்ணத்தின் விஷயத்தில் செய்யும். பக்தி செலுத்திக் கொண்டே போனால் அது முற்றிப் பூரணமாகும்போது, 'மனஸ் என்று தனியாக ஒன்றை வைத்துக் கொண்டு இவன் வேறாக பக்தன் என்று இருக்க வேண்டாம்' என்று பகவானே நினைப்பார் — இவனை மனஸிலிருந்தே அவிழ்த்து விடுதலை பண்ணித் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்தில் ஒன்றாக்கிக் கொண்டு விடுவார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

வழிக்கையை நாம் உடனடியாக மேற்கொள்ள வேண்டும். இல்லையேல், வெகு விரைவில் உலகின் மற்ற உயிரினங்களோடு சேர்ந்து மனித இனமும் முழுமையாக அழிவது உறுதி. இதற்காக உங்களின் பிரயோஜனமான யோசனைகளை வரவேற்கிறேன்."

"நாம் ஏன் யுரேனசுக்குத் தப்பி ஓடி விடக் கூடாது?" பதற்றத்தோடு கூறினார் அமெரிக்க மாநிலத்தைச் சேர்ந்த ஒரு விஞ்ஞானி.

ரஷ்ய மாநில விஞ்ஞானி அவரை இடைமறித்தார். "உங்களுக்கும் எனக்கும் யுரேனசுக்குப் போக அரசு அனுமதிப் பத்திரம் இருக்கிறது. அவசர கால ராக்கெட் கூட தயாராகவே நிற்கின்றது. ஆனால், நாம் மட்டும் தப்பிக்கவா, இந்தக் கூட்டம் தோழரே? உலகமே பிழைக்க வேண்டும். அதுவே நமது நோக்கமாக இருக்க வேண்டும்.

"வேறு ஏதாகிலும் யோசனைகள்?" உலகத் தலைவர் கட்டாயப்படுத்தினார்.

இந்திய மாநில விஞ்ஞானி நம்பிக்கை தோய்ந்த முகத்துடன் எழுந்தார்.

எல்லோரின் பார்வையும் அவர் மீது பதிந்தது. "என்ன திட்டம்?"

"அணு ஆயுதங்களால்தான் இந்த பூமி அழியும் என்று முற்கால மக்கள் பயந்ததாகச் சரித்திரக் குறிப்புகளில் படிக்கின்றோம். ஆனால், இன்று உலகமே ஒரே குடையின் கீழ் ஒற்றுமையாக வாழ்வதால் அந்த அச்சமே அர்த்தமற்றதாகிவிட்டது."

"ஆமாம். அதற்கென்ன இப்போது?" ஜப்பான் மாநிலம் அவசரப்பட்டது.

"என்றாலும், வேறு விண்மீன்களைச் சேர்ந்த கிரகவாசிகள் திடீரென பூமியின் மீது போர்தொடுக்கலாம் என்ற தொலை நோக்குடன், நாம் சக்தி மிக்க அணு ஆயுதங்களைத் தயாரித்து வைத்திருக்கிறோம் அல்லவா?"

"ஆமாம்" என்ற பலருக்குத் திட்டம் புரிய ஆரம்பித்தது.

"அவைகளைப் பயன்படுத்தி இந்தச் சூரிய பிரச்னையிலிருந்து நாம் தப்பிக்க இயலும் என நான் கருதுகிறேன்."

"விளக்கமாகச் சொல்லுங்கள்" என ஆவல் மேலிடக் கூறினார் உலகத் தலைவர்.

"இத்திட்டப்படி, தக்க இடங்களில், குறிப்பிட்ட அளவு சக்தி வாய்ந்த அணு குண்டுகளை வெடிக்கச் செய்ய வேண்டும். ஏற்கெனவே, வெப்பத்திற்கு அஞ்சி மக்கள் யாவரும் மண்ணுக்குள், அதுவும் காரீயக் கவச வீடுகளில் வாழ்கின்றனர். எனவே, அணுகுண்டுச் சிதைவினால் நமக்கு எந்த பாதிப்பும் இருக்கப் போவதில்லை."

"உண்மை."

"ஆனால் வெடிப்பின் காரணமாக ஏற்படும் புழுதிப் புயல் சூரியனை மறைக்கும். இப்போது சூரியன் சிவப்புப் பேரரக்கனாக இருப்பதால், அதிகப்படியான வெப்பம் மட்டுமே தடை செய்யப்படும். எனவே, பனியுகம் தோன்றும் அபாயமும் இல்லை. தேவையான ஒளியும் வெப்பமும் கிடைக்க கணக்கிடுகன்படி காரியமாற்றினால் வெற்றி நிச்சயம்."

இதனைக் கேட்டதும், விஞ்ஞானிகள் (உலகத் தலைவர் உட்பட) ஆனந்தத்தால் கூச்சலிட,

சூரியனுக்கு எதிரான போர் துரிதமாகத் தொடங்கியது.

மாண்புமிகு

# முதலமைச்சர்

கௌரி.மணிசேகரன்

## சருக்கம் — 15

### "எல்லாம் எனக்குத் தெரியும்!"

அரண்மனைச் சித்திரக் கூடம் ஆனந்த வயப்பட்டு அலங்காரமுடன் திகழ்கிறது. ஜோதி வருகிறாளாம்! அதற்காக? இவ்வளவு ஜோதியாகவா அந்தக் கூடம் காணப்பட வேண்டும்?

பட்டத்தரசி தியாகவல்லி தேவியும் இரண்டாமரசி முக்கோக்கிழானடி தேவியும் மூக்கின் மீது விரல் வைத்தனர் என்பதைவிட மூக்கே வியர்த்து நோக்கினர்.

ஜோதியைப் பற்றி செய்தி செய்தியாய்க் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.

இடிபுரளும் நெருப்பனைய இருமாந்த கண்கள்; அவற்றில் இருள் மருளும் மின்னலைப் போல துடிக்கும் இமைகள் என்று புலவர் தண்டியே ஒருசமயம் கூறக் கேட்டிருக்கிறார்கள். அவளைப் பார்க்க வேண்டும் என்கிற அவா, அவர்களுக்கு மட்டுமா? இந்த அரண்மனைக்கே தணியாத தாகமாக இருந்தது.

சித்திரக் கூடத்தில் வேறு எவரும் அமர்ந்திருக்கவில்லை. அதற்கு அனுமதியுமில்லை.. ஏன்? சோழமாதேவிமார்களும் ஜோதியைத் தனித்து எங்காவது பார்த்துக் கொள்ள வேண்டுமேயொழிய ஆலோசனைக் கூடத்தில் அல்ல.

சோழ மகா சக்கரவர்த்தி குலோத்துங்கனும், முதலமைச்சர் சேக்கிழாரும் வந்து அமருகிறார்கள்.

ஜோதி ஏற்கெனவே வந்து அரண்மனை முன்றிலில் அமர்ந்து காத்திருந்தாள். அவளுக்கு அழைப்பு வந்தது.

அரண்மனையினுள் நடந்து வருகிறாள்.

செங்கமலத் திருமடந்தை!

தென்னகக் கலைமடந்தை!

தெவிட்டா நாட்டியத் தெய்வப் பாவை!

எங்கள் பிரான் ஈசன் தந்த கலைத் தூது!

இவள் கழலை, கலை போற்றும்; கலைஞர் போற்றுவர்! கவியரசரையும் புவியரசரையும் கலையரசியாய் வணங்கி நிற்கிறாள் ஜோதி.

"வா, ஜோதி! மாங்கனியால் அறிமுகமான மாமன்னரை நீயறிவாய்! மன்னர் உன்னிடம் ஒரு மகத்தான சேவையை எதிர்நோக்கி உன்னை இங்கு வரவழைத்து இருக்கிறார்."

செல்விழிகள் போர்விழிகளைச் சந்திக்கின்றன. அலைகடலின் ஆழத்தில்தான் முத்து



இருக்குமோ? அந்தச் சந்திப்பில் முத்து முறுவலித்தது; பவளம் பண்ணிசைத்தது! உதடுகள் சிரிப்பதற்கு மாறாகக் கண்களே சிரித்துக் கொண்டன. அப்படி ஓர் ஆழமோ?

"சொல்லுங்கள் மன்னர் பிரானே!"

"ஜோதி! தில்லையில் பேரம்பலத்தில் பொன் வேய்ந்து இருக்கிறேன். அது ஒரு பிரார்த்தனை. என்ன பிரார்த்தனை தெரியுமா? சேக்கிழார் முதலமைச்சராக வேண்டுமே என்று நான் முன்னம் செய்து கொண்ட பிரார்த்தனை. ஆறு மாதங்களுக்குப் பிறகு நிறைவு பெறுகிறது. அந்தப் பொன்வேய்ந்த விழாவில் எனக்காக இல்லாவிட்டாலும், உனக்காக — உனது தெய்வத்துக்காக ஆடுகிறாய். மன்னன் என்கிற முறையில் கேட்டுக் கொள்கிறேன்."



''முடியாது.

எடுத்த எடுப்பில் இப்படி ஒரு மறுமொழியா?

''இப்படி ஒரு மறுமொழியா ஜோதி?'' என்ருர் சேக்கிழார்.

''எனக்கு உடன்பாடில்லை என்பதை வேறு எப்படிச் சொல்வேன்?''

''ஏன் உடன்பாடில்லை? தில்லையில் பொன் வேய்ந்த வைபவம், நடராஜப் பெருமான் முன் நடனம். நீ எவ்வளவு பொன் கேட்டாலும் மாமன்னர் வாரி வழங்க இருக்கிருர்.''

''இருக்கும் பொன் போதுமே! இனியும் தேவையா? எனக்குத் தேவை நீங்கள் என்பதால்தானே உங்களைச் சரணடைந்தேன்.''

''ஜோதி!''

சேக்கிழாருக்கு இந்த வார்த்தைகள் அறத் துன்பமாய்ப் போய்விடவே, மன்னனையும் மதுவனைய மாதையும் மாறி மாறி நோக்குகிருர்.

''பிரபோ! தேவை என்ற சொல்லில் எவ்வளவோ தேவைகளிருக்கின்றன. நீங்கள் தேவையில்லாமல் விழிக்கிறீர்கள்!''

''பிரபோ என்கிற சொல்லிலேயே எவ்வளவோ தேவைகள் தெரிகிறதே ஜோதி'' என்ருன் குலோத்துங்கன்.

''இறைவனையும் பிரபோ என்று சொல்லலாம் அல்லவா சோழர் பிரானே!''

''அதைத்தான் நானும் குறிப்பிடுகிறேன்'' என்று கூறித் தன்னைத் தேற்றிக் கொண்ட குலோத்துங்கன், ''அந்தப் பிரபுவே உத்தரவிடுகிறபோது...?'' என்று சொல்லி நிறுத்தினுர்.

''அவர் உத்தரவிடவில்லையே! உங்களுக்காகத்தானே பரிந்துரைத்துக் கொண்டு வருகிருர்.''

சேக்கிழார் சிந்தனையில் ஜோதி பளிரிடுகிறது. இவன் தன்னிடம் பலமுறை சிந்தனையால் சித்து விளையாடியவளாயிற்றே! இப்போது எந்தச் சித்துக்கு இந்த அஸ்தி வாரமோ?

''ஜோதி! மன்னர் உத்தரவைக் காட்டிலுமா முதலமைச்சர் உத்தரவு?''




# கவியரசன் காளிதாசன்

"நான் உங்களை முதலமைச்சராக என்றுமே பார்த்ததில்லை; இன்றும் பார்க்க வில்லை. ஈசன் அனுப்பிய தேவ தூதனைப் பார்க்கிறேன். தொண்டர் சீர் பரவும் தொண்டராகப் பார்க்கிறேன்! இந்தத் தோகை நடனத்துக்குத் தொகுப்பாசிரிய ராகப் பார்க்கிறேன்! இந்த ஜோதியின் அம்பலவன் நீங்கள்! உடனே நீங்கள் உத்தரவிடலாம். ஆனால் மன்னரைச் சாட்சி யாகக் கொண்டு நான் ஒரு நிபந்தனையை யாசிப்பேன். அது கோடி பொன் பெறும். அதனை ஏற்றால் என் தோகை விரியும்!"

"என்ன நிபந்தனை?"

"முதலில் உத்தரவிடுங்கள்."

"உத்தரவு. நீ ஆடித்தான் தீர வேண்டும்."

"அவ்வாறானால் நிபந்தனையை ஏற்றுக் கொண்டீர்கள் என்பதாக அர்த்தம். சரி தானே?"

"நிபந்தனையை நான் செவிசாய்க்கவில் லையே?"

"ஆடித்தான் தீர வேண்டும் என்று சொன்ன பிறகு?"

சேக்கிழார் அதிர்ந்து அலை மோதிப் போனார். "ஜோதி! உன் சித்து விளையாட்டு போதும். சொல்வதைச் சொல்."

"பேரம்பலத்தில் நான் ஆடுகிறபோது, எந்த நாயனாரை எடுத்துக் கொள்வேனோ எனக்கே தெரியாது! நான் காலில் சதங்கை கட்டி வந்து நிற்பேன், எனது தோகை விரிய எங்கள் தோத்திரம் தேவை. அதாவது.... றைக்கு ஆரம்பிக்கிறீர்கள்."

"ஜோதி!"

"அன்றைக்கு என்றுதான் சொன்னேனே யொழிய அன்று முதல் என்று சொல்ல வில்லை. தோத்திரம் என்று சொன்னேனே யொழிய தொண்டர் புராணமே என்று சொல்லவில்லை! எனவே தோத்திரப் பாடலை இயற்றித் தருகிறீர்கள். அதனை முதலில் ஆடு வேன். பிறகு எதனை ஆடுவேன் என்பதைப் பின்னர் தீர்மானிப்பேன். தோத்திரமாகிய வாழ்த்தைப் பாடுவதுடன் தொடர்ந்து மானுடப் பயனையும் பாடுங்கள்! நான் ஒரு மகா மானுடரைப் பற்றி அண்ட சராசரம் நடுங்கும்படி ஆடுவேன். பிறகு நாயன்மார் களைச் சிந்திக்க நாட்களை எடுத்துக் கொள்ள லாம். ஆனால் திருத் தொண்டர் புராணம் நீங்கள் பாடிய பிறகுதான் எனது ஆத்மாவே சாந்தி பெறும்! எனது ஆத்மா மட்டுமல்ல! சோழ சாம்ராஜ்ய ஆத்மாவே சொர்க்கம் காணும்!"

சேக்கிழார் கழிமுனையில் ஒரு ஜோதி உருண்டையாய்ப் பிரகாசிக்கிறது. அதிலே நடராஜப் பெருமான் உடுக்கையொலி கேட் கிறது. காலின் சதங்கையொலி கேட்கிறது.

எடுத்த பாதத்தின் இனிய ஓசை; ஈசன் கொடுத்த ஜதிகளின் கொந்தளிப்பு....

"ஜோதி.....! ஒப்புக் கொள்கிறேன்! ஆனால் நானும் ஒரு நிபந்தனை போடுவேன். எனக்கு ஈசனே, அவன் மூலம் வேறு யாரோ தொடங்கப் போகிற மாக்கதைக்கு அடி யெடுத்துத் தர வேண்டும். அந்த அடியைப்

# புற்று நோய்க்கு ஆயுர்வேத சிகிச்சை


கண்ணம்மாள்

நான் தருமபுரி மாவட்டம் பர்கூரைச் சேர்ந்த திருமதி கண்ணம்மாள். எனக்கு 48 வயது ஆகிறது. என் வாயில், கன்னத்தின் குழிவுப் பகுதியில் சுரீர் சுரீரென்று வலித் தோன்றி என்னை மிகவும் வதைத்துக் கொண்டிருந்தது. உள்ளூர் மருத்துவர்கள் பலரிடம் சிகிச்சை பெற்றும் வலி குணமாகவில்லை. அந்த மருத்துவர்கள் என்னைப் புற்று நோய் மருத்துவமனைக்குப் போகச் சொன்னார்கள். என் மகன் என்னை ஹைதராபாத், சிக்கட் பள்ளியில் உள்ள டாக்டர் எம். பாபு ராவிடம் அழைத்துப் போனான். நான்கு வாரங்கள் அவர் எனக்கு ஆயுர்வேத சிகிச்சை அளித்தார். அதற்குப் பிறகு வலி கணிசமாகக் குறைந்தது. தொடர்ந்து பன்னிரெண்டு வாரங்களுக்கு அச்சிகிச்சையை எடுத்துக் கொண்டேன். எனக்கு இருந்த புற்று நோய் இப்போது பூரணமாகக் குணமாகிவிட்டது.

டாக்டர் பாபு ராவ் புற்று நோயால் அவதிப்படும் இன்னும் பல நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிக்கும் சேவையைச் செய்து அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

கண்ணம்மாள்,
கோட்டூர், P.O. பர்கூர், தர்மபுரி மாவட்டம்,
தமிழ்நாடு.

| விலாசம் | போன் நெம்பர் | பார்க்கும் கிழமை |
|---|---|---|
| டாக்டர் எம். பாபு ராவ்<br>கான்சர் இன்பர்மரி (ஆபீஸ்),<br>1—1—271/3, சிக்கட்பள்ளி<br>ஹைதராபாத்—500 020 | 64735 | பிரதி வியாழன் & வெள்ளி |
| C/o. ஹோட்டல் சுதாரா,<br>உஸ்மான் ரோடு, தி. நகர்,<br>சென்னை—600 017. | 445164 | பிரதி சனி |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்,<br>எம்.ஜி. ரோடு,<br>பெங்களூர்—560 017. | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o. ஹோட்டல் கே.கே. இண்டர் நேஷனல்<br>தெற்கு ரயில் நிலையம் எதிரில்<br>எர்ணாகுளம்,<br>கொச்சின்—682 016. | 366010<br>366040 | பிரதி திங்கள் |
| C/o. ஹோட்டல் நடராஜ்,<br>பகட்கன்ஜ்<br>இம்பீரியல் தியேட்டர் அருகில்<br>புது தில்லி—110 055 | 522699 | பிரதி செவ்வாய் |
| C/o. ஹோட்டல் மிட்—டௌன்,<br>அந்தேரி ரயில்வே எதிரில்,<br>ஸ்டேஷன் (மேற்கு)<br>பம்பாய். | 628882 | பிரதி புதன் |



**"சென்னை எல்லையிலிருந்து உங்க பிளாட்டுக்கு முப்பது நிமிஷப் பிரயாணம் தான் என்றீர்களே! பிரயாணம் எதில்? ரெயிலிலா? பஸ்ஸிலா?"**

**"ஏர் பஸ்ஸில்!"**

பின்பற்றியே பாடலைத் தொடங்குவேன்."

ஏதோ உத்வேகம் வந்தவர்போல உரக்கச் சொல்கிறார் சேக்கிழார்.

"ஆகா!" என்றாள் ஜோதி. எழுந்து கொண்டாள்.

"நான் விடை பெறுகிறேன் சுவாமி!"

மாமன்னர் குலோத்துங்க சோழன் மகிழ்ந்து கொண்ட பரமானந்தத்துக்கு எல்லை ஏது? அவனது கண்கள் அவனையுமறியாமல் நீரை உகுத்தன.

சேக்கிழாரும் எழுந்து கொண்டார்.

"என்ன சேக்கிழாரே?"

"இன்று எனது ஜன்ம நட்சத்திரம். சில கடமைகள் இருக்கின்றன!"

அவர் ஜோதியைப் பின்தொடர்ந்து ஒழுக்கத்தின் நீதியாய் நடக்கிறார்.

குலோத்துங்கன் மனத்தே குவலயம் சுழல்கிறது.

நெட்ட நெடிய பெருமூச்சு. அந்தப் பெருமூச்சுகள் ஆயிரமாயிரம் அர்த்தங்கள்.

**சே**வகன் ஒருவன் வந்து வணங்கிச் செய்தி சொன்னான்:

"சோழேஸ்வரா! ஆசான் கூத்தர் பிரான் வந்திருக்கிறார்!"

ஒட்டக்கூத்தரா?

இவர் ஏன் இந்நேரம் பார்த்து வர வேண்டும்?

இரு நாட்களாகவே அவரது போக்கில் கண்ட புதிய மாறுதல் சிந்திக்கச் செய்கிறது.

"வரச் சொல்!"

சற்றைக்கெல்லாம் கவிராட்சஸரான ஒட்டக்கூத்தர் சினந்த கண்களுடன் பிரவேசிக்கிறார்.

"வாருங்கள், ஆசிரியப் பெருமானே!" என்று எழுந்து கரம் கூப்பி வரவேற்கிறான் குலோத்துங்கன்.

"அமருங்கள்!"

ஒட்டக்கூத்தர் அமர, பிறகு குலோத்துங்கன் அமருகிறான்.

"இரவு தோட்டத்தில் ஏதோ சலசலப்பு என்று கேள்விப்பட்டேன். உனது உயிருக்கு எவனோ குறி பார்த்தானாமே!"

"எனது உயிருக்கல்ல; சேக்கிழார் உயிருக்கு!"

"ஐய்யோ! இதற்காகவா நான் படாத பாடுபட்டுக் குன்றத்தூரிலிருந்து அழைத்து வந்தேன்? யாரவன்?"

"தப்பிவிட்டான். ஆனாலும் அவனது வலது தோளில் குத்துவாள் வடு இருக்கிறது! என்றாவது அகப்படுவான்!"

"சேக்கிழாரும், ஜோதியும் வந்து செல்கிற மாதிரி இருக்கிறது?"

"ஆமாம், பேரம்பலப் பொன் வேய்ந்த விழா நாளில் ஜோதியை நடனமாடக் கேட்டுக் கொண்டேன். அவள் மறுத்துவிட்டாள்."

"நீ சொல்லியுமா மறுத்துவிட்டாள்?"

"நான் சொல்லியுமா என்றால்? அவள் தமிழுக்குத் தலை வணங்குகிறாளே யொழிய தார்வேந்தனுக்குத் தலை வணங்குவதாகக் காணோம்!"

"நீ தார் வேந்தனல்லவே! அவளது காதல் வேந்தன் அல்லவா?"

குலை நடுங்கிப் போனான் குலோத்துங்கன்.

"தவறியும் இனியொருமுறை அப்படிச் சொல்லி விட வேண்டாம் ஆசிரியப் பெருமானே! அவளது காதலன் யார் என்பது அவளுக்குத்தான் தெரியும்."

"சேக்கிழார் என்கிறாயா?"

"பாவம் சூழும்!"

"சேக்கிழாரை இருந்தொண்டர் புராணம் பாடப் பணித்திருக்கிறாயாமே!"

"நானா? சரஸ்வதியின் கடாட்சம் பெற்ற தாங்களிருக்க, சேக்கிழாரைக் கேட்டுக் கொள்வதாவது?"

"நீ சேக்கிழாரைப் பணித்து இருக்கிறாய். எனக்குத் தெரியும்! நீ அவரைக் குன்றத்தூரிலிருந்து கொண்டு வந்ததன் மர்மம் இப்போதுதான் புரிகிறது."

"ஒருமர்மமுமில்லை. நல்ல அரசியல் ஞானி. எனவே கொண்டு வந்தேன். அதற்கேற்ப, சோழ நாட்டு அரசியலையே சொர்க்கபுரியாக்கி இருக்கிறார் அல்லவா? பாடும்படி கேட்டுக் கொண்டு துடிப்பவள் அந்த ஜோதி! இப்போதும் அப்படி ஒரு நிபந்தனையின் பேரில்தான் தில்லையில் ஆடச் சம்மதித்து இருக்கிறாள்."

"எல்லாம் எனக்குத் தெரியும்" என்று கூறிய ஒட்டக்கூத்தர் எழுந்து கொண்டார்.

அதே நேரத்தில்......

"எல்லாம் எனக்கும் தெரியும்" என்று நெருப்பாகக் கூறிய வண்ணம் சித்திரக் கூடத்துள் பிரவேசித்தாள் பட்டத்தரசி தியாகவல்லி.

"தியாகவல்லி!"

திகைத்து நோக்குகிறான் திருநீற்றுச் சோழனான குலோத்துங்கன்.

"பிரபோ! ஜோதியின் அழகு என்னையே மயக்கியது என்றால் நீங்கள் எம்மாத்திரம்? அவளது அரண்மனைப் பிரவேசம் நல்லதோ கெட்டதோ நமசிவாயம் அறிவார். இவ்வளவே என்னால் சொல்ல முடியும்!"

"நல்லதே!"

குலோத்துங்கன் இவ்விதம் கூறியதும் கெக்கலி கொட்டிச் சிரிக்கலானார் கவிகளின் ராட்சஸரான ஒட்டக்கூத்தர்.

(தொடரும்)

# விளக்கத்துக்குரிய சினிமா விளம்பரங்கள்

**சினிமா விளம்பரங்களில் காணப்படும் வசனங்களுக்கு ஒரு வேளை மறைமுகமான உள் அர்த்தம் ஏதேனும் இருக்குமோ? உதாரணமாக —**

| விளம்பர வாசகம் | உள் அர்த்தம் |
|---|---|
| இன்றே பாருங்கள் | படம் நாளை வரை தாங்காது. |
| நீண்ட இடைவெளிக்குப் பின் வரும் (நல்ல) படம் | படம் துவங்கியது ஆறு வருடங்களுக்கு முன். இப்போதுதான் ரிலீஸாக வேளை வந்தது. |
| பார்த்தவர்களே மீண்டும் மீண்டும் பார்க்கிறார்கள். | படத்தின் கதையில் ஒரே குழப்பம். ஒரு தடவையில் புரியாது. |
| கலகலப்பால் கொட்டகையே அமர்க்களப்படுகிறது. | படம் குப்பை. எனவே அடிதடி, தகராறு, கைகலப்பு, தியேட்டரில் கலாட்டா. |
| தயவு செய்து முடிவை வெளியே சொல்ல வேண்டாம் என கேட்டுக் கொள்கிறோம். | தயாரிப்பாளருக்கு ஏற்பட்ட சோகமான முடிவை. சொந்த ஊருக்கே ஓடிவிட்டார். |
| உயிரைப் பணயமாக வைத்து எடுக்கப்பட்ட படம் | "படத்தை சீக்கிரம் முடிக்காவிட்டால் தொலைத்துக் கட்டிவிடுவேன்" என பைனான்சியர் தயாரிப்பாளரை மிரட்டியதால் இருக்கலாம். |
| சிந்திக்க வைக்கும் வசனங்கள் | 'ஏற்கெனவே வேறு படத்தில் வந்த வசனங்கள்தானே இவை? எந்தப் படம்?' என சிந்திக்க வைக்கும். |
| புதுக் கதாநாயகியின் நடிப்பு, கண்ணீரை வரவழைக்கும். | 'இவ்வளவு மட்டமாக நடிக்கிறாளே இந்தப் பெண்' என வருத்தப்படுவதால் கண்ணீர் வரும். |










— '628'

**கல்கி:** ஒகேனக்கல் பலரையும் கவரும் ஒரு சுற்றுலா மையமாக இருந்தும் கூட அங்கு பஸ் ஸ்டாண்டு கூட இல்லை. அதோடு பஸ்களுக்கான கால அட்டவணை போன்ற எதுவும் இல்லாததால் சுற்றுலாப் பயணிகளுக்கு ஏற்படும் சிரமம் சொல்லி மாளாது. ஏன் அப்படி?

**தர்மபுரி மாவட்ட கலெக்டர் பாலகிருஷ்ணன்:** இப்போது பஸ்கள் சென்று நிற்கும்இடத்திற்குப் பக்கத்திலேயேஓர் இடம் இருக்கிறது. அந்தஇடத்தில் அண்ணா போக்குவரத்துக் கழகத்தின் மூலம் பஸ் ஸ்டாண்டு அமைப்பதற்கான முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. மேலும் பூங்கா போன்றவை அமைப்பதற்கான முயற்சிகளும் நடந்து கொண்டிருக்கின்றன.

**கல்கி:** பெரும்பாலான சினிமா தியேட்டர்களில் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு என்று வகுப்புவாரியாக டிக்கெட் கொடுக்காமல் எல்லா வகுப்புகளுக்குமே முதல் வகுப்புக்கான கட்டணத்தைப் பெற்றுக் கொண்டு எங்கு வேண்டுமானாலும்

# “உங்கள் சந்திப்புக்காகவே காத்திருந்தேன்!”



உட்கார்ந்து படம் பாருங்கள் என்று சொல்கிறார்களாமே? அதோடு சில சமயங்களில் 'கமர்ஷியல் சேல்ஸ் டேக்ஸ்' முத்திரை இல்லாத டிக்கெட்டுகள் கொடுக்கப்படுகின்றனவாமே? இதற்கெல்லாம் காரணம், அந்தந்த சினிமா தியேட்டர் உரிமையாளர்களுக்கு இருக்கும் அரசியல் செல்வாக்குத்தான் என்று கூறுகிறார்களே?

**கலெக்டர்:** சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற ரீதியில் குற்றம் புரிந்தவர் யாராக இருந்தாலும் அவர்கள் மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டுக் கொண்டுதான் வருகின்றது. கடந்த 19.4.86 அன்றுகூட கணேசா திரையரங்கைத் தணிக்கை செய்து குற்றம் கண்டறியப்பட்டு ஐந்நூறு ரூபாய் அபராதத் தொகை வசூலிக்கப்பட்டது. பாலக்கோட்டிலுள்ள சரவணா தியேட்டர் கடந்த 1.4.86 மற்றும் 9.5.86 தேதிகளில் தணிக்கையிடப்பட்டு ரூ. 750 அபராதத் தொகையாக வசூலிக்கப்பட்டது. தணிக்கைகள் மேலும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

**கல்கி:** தருமபுரி நகராட்சியில் பணம் கட்டி மூன்றே நாட்களில் குடிநீர் இணைப்பு வழங்கப்பட்டுவிடும் என்று போர்டு வைத்திருக்கிறார்கள். ஆனால் பொதுமக்களிடம்விசாரித்தபோது அப்படி இதுவரை வழங்கப்பட்டதாகச் சரித்திரமே கிடையாது என்று சொல்கிறார்கள். மேலும் லஞ்சம் கொடுத்தால் மூன்று

நாட்களில் கூட குடிநீர் இணைப்புப் பெற்றுவிடலாம் என்பதற்கான சமிக்ஞைதான் அந்த போர்டு என்று சொல்கிறார்களே?

கலெக்டர்: அலுவலகரீதியான வேலைகள் முடிக்கப்பட்டு மூன்றே நாட்களில் அந்த விண்ணப்பங்கள் தயார் நிலைக்கு வந்துவிடுகின்றன என்பதற்கான போர்டுதான் இது. இதுவரை மூன்று நாட்களில் இணைப்பு ஏதும் வழங்கப்பட்டதில்லை என்பது உண்மைதான் என்றாலும் இனி அதற்கு முயற்சி செய்கிறோம். மேலும் லஞ்சத்தைப் பற்றிச் சொன்னீர்கள். அது பல துறைகளிலும் பரவலாகப்புகுந்திருக்கிறதுஎன்பதைநானும் ஒத்துக் கொள்கிறேன். அதைப் போக்குவதற்காக நானே பல முறை பல குற்றவாளிகளைக் கண்டுபிடித்து சஸ்பெண்ட் செய்திருக்கிறேன்; செய்து கொண்டும் இருக்கிறேன்!

கல்கி: தருமபுரி நீச்சல் குள வேலைகள் முக்கால்வாசி முடிந்த நிலையில் அப்படியே கிடப்பதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: நிதிதான் காரணம். ஒன்பது லட்சத்தில் முடிந்துவிடும் என்று எதிர்பார்த்தது இப்போது பதினொரு லட்சத்தை எட்டும் போல் இருக்கிறது. இன்னும் மூன்று நான்கு மாதங்களில் முடித்துவிட முடியும் என்று நம்புகிறேன்.

கல்கி: உடம்பெல்லாம் வெடிப்பு வெடிப்பாக உள்ள, ஒருவிதத் தோல் வியாதியால் பீடிக்கப்பட்டுள்ள பிரபாவதி என்ற இளம் பெண் டைப்பிங் முடித்திருக்கிறார். அவரை நம்பித்தான் அவருடைய குடும்பத்திலுள்ள மற்ற ஆறு பேரும் இருக்கிறார்கள். அதனால் அந்தப் பெண் ஒரு வேலை வேண்டுமென்று கலெக்டர் உள்பட பலரிடம் கேட்டும் ஒரு வேலை கொடுக்கப்படவில்லை. நிஜமாகவே அந்தப் பெண்ணின் உடலில் நிரந்தர வியாதி என்னும் ஊனமிருந்தும் அவரை ஊனமுற்றோர் பட்டியலில் சேர்க்கச் சட்டம் இடந்தரவில்லை என்கிறார்களாம். இவற்றோடு ஒரு கொடுமைஎன்னவென்றால், மனுநீதி நாளின் போது உங்களுக்கு முன்பிருந்த கலெக்டர் கொடுத்த சிபாரிசுக் கடிதத்தை எடுத்துக் கொண்டு கிருஷ்ணகிரி வேலை வாய்ப்பு அலுவலகத்திற்குச் சென்றபோது, அந்தக் கடிதத்தை அங்கிருந்த அலுவலர் ஒருவர் அலட்சியம் செய்ததோடு மட்டுமில்லாமல், "நீ எல்லாம் எதற்கு உயிரோடு இருக்கிறாய்? செத்துத் தொலைய வேண்டியது தானே?" என்று பேசினாராமே! அந்தப் பெண்ணே எங்களிடம் முறையிட்டு அழுதார்...

கலெக்டர்: அப்படியா சொன்னார்கள்? அப்படிச் சொன்னவர் யாராக இருந்தாலும் விசாரித்துக் கண்டறிந்து உடனடியாக நடவடிக்கைஎடுக்கிறேன். மேலும் அந்தப்பெண் பிறரை நம்பி வேலைக்குச் செல்வதைவிட, அவரே டைப்பிங் படித்திருப்பதால் சுயமாக ஒரு டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட் நடத்துவதற்கான கடனுதவிகள் வழங்க ஏற்பாடு செய்கிறேன்.

கல்கி: நல்லம்பள்ளி ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த ஜருகு அரசு உயர்நிலைப் பள்ளியில் நானூறு மாணவ, மாணவியருக்குமேல் படிக்கிறார்கள். அப்படியிருந்தும் அங்கு உட்காருவதற்கான பெஞ்ச் வசதி கூட இல்லை. இப்படிப் பல பள்ளிகள் இருப்பதாகச் சொல்கிறார்களே?

கலெக்டர்: போதுமான அளவுக்கு நிதி வசதி இல்லாததுதான் காரணம். தமிழகம் முழுவதிலுமுள்ள பள்ளிகளுக்கு இந்த ஆண்டு அரசு சுமார் பதினைந்து லட்சரூபாய் ஒதுக்கியிருக்கிறது. அதில் தருமபுரி மாவட்டத்திற்குக் கிடைக்கும் தொகையில் சில பள்ளிகளுக்காவது வசதி செய்ய முடியும் என்று நம்புகிறேன்.

கல்கி: தருமபுரியிலுள்ள ராஜகோபால் கவுண்டர் பூங்காவிலும், அதியமான் அரசு மேல்நிலைப் பள்ளியிலும் பாதுகாப்பு வசதிகள் போதாததால் இரவு நேரங்களில் விபசாரம் நடப்பதாகச் சொல்கிறார்களே?

கலெக்டர்: உடனடியாக நடவடிக்கை எடுக்கச் சொல்கிறேன்.

கல்கி: பாலக்கோடு சர்க்கரை ஆலையில் சுமார் ஐம்பது சதவிகித உற்பத்திக் குறைவுக்குக் காரணம் அதிகாரிகளின் மெத்தனமான போக்குதான் என்கிறார்களே, உண்மையா?

கலெக்டர்: உண்மை அதுவல்ல. தண்ணீர்ப் பற்றாக்குறைதான் காரணம். இப்போது அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுக் கொண்டு வருகின்றன. தண்ணீர்ப் பற்றாக் குறையால் கரும்பு கொள்முதல் குறைந்த போது, நாங்கள் விவசாயிகளைப் பாதிக்க விடவில்லை. அதற்குத் தகுந்த மாற்று ஏற்பாடுகளைச் செய்திருந்தோம். அதை விவசாயிகளே பாராட்டியிருக்கிறார்கள். மேலும் சர்க்கரை ஆலையின் உற்பத்தித் திறனையும் ஆயிரத்து இருநூறிலிருந்து இரண்டாயிரம் டன்களுக்கு உயர்த்துவதற்கான விரிவாக்க ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருக்கிறோம்.

கல்கி: தருமபுரியிலுள்ள தியாகி தீர்த்தகிரியார் மைதானத்தில் பல தனியார் கடைகள் தான் உள்ளன. அதை நகராட்சி நவீனப்படுத்தி வாடகைக்கு விட்டால் அதிக வருமானம் கிடைக்குமல்லவா?

கலெக்டர்: எழுபது லட்ச ரூபாய் செலவில் அதில் நவீனக் கட்டடங்கள் கட்டுவதற்கான திட்டம் நகராட்சியிடம் இருக்கிறது. ஆனால் அந்தக் கடைக்காரர்கள் சங்கம் அதற்குத் தடையுத்தரவு வாங்கியிருக்கிறது. விரைவில் ஒரு சுமுகமான தீர்வு கிடைக்கும் என்று நம்புகிறோம்.

கல்கி: தருமபுரியிலிருந்து கொல்லம்பட்டி செல்லும் பாதையில் ஒரு பாலம். அதை இடித்துவிட்டுப் புதுப் பாலம் கட்டுவதற்கான வேலைகள் தொடங்கிப் பாதியிலேயே நிற்பதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: டெண்டர் எடுத்தவர் குறிப்பிட்டகாலத்தில் அதைக்கட்டி முடிக்கவில்லை. அதனால் அந்த டெண்டர் ரத்து செய்யப்பட்டு, புது டெண்டர் கோரப்பட்டுள்ளது. விரைவில் முடிந்துவிடும்.



அங்கங்கே குட்டைகள்போல் காட்சியளிக்கும் ஓசூர் பஸ் ஸ்டாண்டு

கல்கி: மத்தூர் அருகில் இருக்கிறது கவுண்டனூர். அங்குள்ள அத்திப்பள்ளம் ஏரிக்குக் கடந்த ஐந்தாண்டு காலமாகத் தண்ணீர் வருவதே நின்றுபோய் விட்டதால் குடிநீருக்கே கஷ்டப்படுவதாகவும் அந்த ஏரிக்கான கால்வாயைச் சுத்தப்படுத்திச் சரி செய்ய எம். பி. முதற்கொண்டு பலருக்கு மனு கொடுத்தும் காரியம் நடக்கவில்லையென்றும் அந்த ஊரின் ஊராட்சி மன்றத் தலைவர் மாணிக்கமே எங்களிடம் முறையிட்டார்...

கலெக்டர்: இந்தப் பிரச்னை ஊத்தங்கரை ஜமாபந்தியின் போது என் கவனத்திற்கும் வந்தது. அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

கல்கி: அதோடு அந்த ஊரில் குழந்தைகள் சத்துணவுக் கூடத்திற்கென்று தனிக் கட்டடம் ஏதும் கட்டித் தரப்படவில்லை என்றும் சொல்கிறார்கள்.

கலெக்டர்: ஒதுக்கப்பட்ட நிதியில் மாவட்டம் முழுவதும் நூற்றுப் பத்து சத்துணவுக் கூடங்களைக் கட்டி முடித்திருக்கிறோம். மேலும் கட்ட நிதி வசதி வேண்டும். இருக்கும்போது நிச்சயம் கட்டுவோம்.

கல்கி: பர்கூர் அருகில் ஓடும் பாம்பாற்றைக் கடந்துதான் கொத்தூர், கோதியழகனூர், நேரலக்கோட்டை, ஜகினிக்கொல்லை... என்று பதினொரு கிராமத்து மக்கள் செல்ல வேண்டும். ஆனால் அதற்கொரு பாலம் இல்லை. பொது மக்களோடு அத்தனை கிராமத்திலிருந்து வரும் பள்ளிச் சிறுவர்களும் மழைக்காலத்தில் ஆற்றைக் கடக்க முடியாமல் தவிக்கிறார்கள்...

கலெக்டர்: உடனடியாகப் பாலம் கட்டுவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுகிறேன்.

கல்கி: சிறு தொழில்களை ஊக்குவிக்கும் வகையில் தீப்பெட்டித் தொழிலுக்காகக் கட்டப்பட்ட கட்டடங்களெல்லாம் இப்போது அப்படியப்படியே கிடக்கின்றன. தொழில் நடக்காமல் போனதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: தீப்பெட்டித் தொழிலில் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் தருமபுரி மாவட்டத்தில் இல்லாமல் போனதுதான் அவை மூடப்பட்டதற்குக் காரணம். இப்போது அவை மீண்டும் செயல்படுவதற்கான ஏற்பாடுகளைத் தீவிரமாகச் செய்து கொண்டிருக்கிறோம். விரைவில் மீண்டும் அவை செயல்படத் துவங்கிவிடும்.

கல்கி: ஓசூர் ஒரு தொழிற்பேட்டையாக இருந்தும் வேலை வாய்ப்பில் தருமபுரி மாவட்ட மக்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள் என்ற குறை மக்களிடையே இருக்கிறது...

கலெக்டர்: உண்மைதான். காரணம், தொழில் நுட்பத் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் தருமபுரி மாவட்டத்தில் இல்லாததால்தான் அப்படிப்பட்ட வேலைகளுக்கு வெளி மாவட்டங்களிலிருந்து ஆட்களை நியமிக்கிறார்கள்.

கல்கி: தருமபுரி மாவட்ட மக்கள் தொழில் நுட்பத் தேர்ச்சி பெற வேண்டுமானால் அதற்குத் தருமபுரி மாவட்டத்தில் தொழில் பயிற்சிக் கல்லூரிகளை நிறுவ வேண்டாமா? அது மக்களின் குறை அல்லவே?

கலெக்டர்: நிஜம்தான். சர்க்கரை ஆலையின் மூலமாகத் தொழில் பயிற்சிக் கல்லூரிகளையும் துவங்க உத்தேசித்துள்ளோம். அதன்பிறகு தருமபுரி மாவட்ட மக்களும் தொழில் நுட்ப வேலைகளில் மற்ற மாவட்ட மக்களோடு போட்டியிட்டுப் பயன் பெற முடியும்.

கல்கி: கடந்த 66 — 67 களில் மாஜி இராணுவத்தினர் மறுவாழ்வுக்காக பொம்மிடி அருகிலுள்ள செம்பயானூரில் ஜி. சுந்தரராஜன் என்பவருக்கு ஐந்து ஏக்கர் நிலம் ஒதுக்கப்பட்டதாம். ஆனால் அதை பொம்மிடியிலுள்ள பழனியப்பா தியேட்டர் உரிமையாளர் கிருஷ்ணன். என்பவர் ஆள் பலம், பண பலம் ஆகியவற்றைக் கொண்டு அந்த நிலத்தை ஆக்கிரமித்துக் கொண்டாராம். அதுபற்றி உங்களிடம் கூடக் கடந்த 5.5.86 அன்று அவர் மனு கொடுத்தாராம். நீங்களும் அதை மாவட்ட வருவாய்த்துறை அலுவலருக்கு அனுப்பி நடவடிக்கை எடுக்கச் சொன்னீர்களாம். ஆனால் இதுவரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லையாம். இதுகுறித்து நாங்கள் ஜி. சுந்தரராஜனால் குற்றம் சாட்டப்படும் கிருஷ்ணனைச் சந்தித்தபோது அந்த நிலம் தன்னுடையதுதான் என்றும் அவருடையதாக இருந்தால் நில வரி கட்டியதற்கான ரசீதுகளைக் காண்பிக்கச் சொல்லுங்கள் பார்க்கலாம் என்கிறார். இதை நீங்கள்தான் ஆராய்ந்து நீதி கிடைக்கச் செய்ய வேண்டும்.

கலெக்டர்: நிச்சயமாக. நானே நேரடியாகப் பார்த்து ஆவன செய்கிறேன்.

கல்கி: ஏராளமான கிராமங்களில் தாய்—சேய் நல விடுதிகள் கட்டப்பட்டுத் திறக்கப்படாமலே இருக்கின்றன....

கலெக்டர்: அதற்கு அடிமட்ட ஊழியர்கள் அங்கே தங்குவதற்கு முன்வராததுதான் காரணம். இந்தக் குறை விரைவில் தீர்த்து வைக்கப்படக்கூடிய குறைதான். நடவடிக்கை

எடுக்கிறேன்.

கல்கி: சிங்காரப் பேட்டை என்பது பம்பாயிலுள்ள சிவப்பு விளக்குப் பகுதி போலவேதான் இருக்கிறது. இதை நாங்களே கண்கூடாகக் கண்டோம். நீங்கள் என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?

கலெக்டர்: உடனடியாக போலீஸ் சூப்பரின்டென்டென்டிடம் கூறி நடவடிக்கை எடுக்கச் சொல்கிறேன்.

கல்கி: நிச்சயம் செய்வீர்கள். ஆனால் அந்தக் கெடுபிடிகளெல்லாம் ஒரு வாரத்திற்கோ, இரண்டு வாரத்திற்கோதான் இருக்கும். பிறகு பழையபடி அங்கே விபசாரம் தொடர்ந்துவிடும். உண்மையில் விபசாரிகள் மனம் திருந்தி நல்ல வாழ்க்கைக்குச் செல்ல முயற்சி செய்தால் கூடப் போலீஸ்காரர்கள் தங்கள் 'மாமூல்' வருமானம் பாதிக்கப் படுகிறது என்பதற்காக மீண்டும் அந்தப் பெண்களைத் தேடிப் பிடித்து விபசாரம் செய்யத் தூண்டுகிறார்களாமே! அதனால் தான் இதுபோன்ற செயல்களை முழுமையாக ஒழிக்க முடிவதில்லை என்று அங்குள்ள மக்களே மனம் நொந்து சொல்கிறார்கள்...

கலெக்டர்: நிச்சயம் கடுமையான நடவடிக்கை மேற்கொள்ளச் செய்கிறேன்.

கல்கி: இவற்றோடு அந்தச் சிவப்பு விளக்குப் பகுதியால், நாற்பது நோயாளிகள் சிகிச்சைக்காக வந்தால் அவர்களில் இருபத்தைந்து பேர் பாலுறவு நோய்ச் சிகிச்சைக்குத் தான் வருகிறார்கள். அந்த அளவுக்கு அந்த நோய் பரவியிருப்பதால் ஒரு மூன்று வயதுக் குழந்தைக்குக் கூட வி. டி. நோய்ச் சிகிச்சை யளிக்க வேண்டிய கொடுமை ஏற்பட்டதாக அங்குள்ள டாக்டர் கருணாநிதி என்பவர் கூறினார். மேலும் இப்போது உலகம் முழுவதும் பேசப்படுகிற எய்ட்ஸ் கூட அங்கே இருக்க வாய்ப்பிருக்கிறது என்கிறார் அவர். எனவே நீங்கள் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதை மீண்டும் வலியுறுத்துகிறோம்.

கலெக்டர்: நிச்சயமாக எடுக்கிறேன்.

கல்கி: அரூரிலிருந்து சுமார் ஆறு கி. மீ. தொலைவிலுள்ள கொளகம்பட்டிக் குழந்தைகள் அரூர் சென்று படிக்க பஸ் வசதி ஏதும் இல்லாததால் அந்தக் காட்டு வழியில் நடந்தே சென்று படிக்க வேண்டியிருக்கிறது. காலை, மாலை போன்ற பள்ளி நேரங்களிலாவது டவுன் பஸ் வசதி செய்து கொடுத்தால் புண்ணியமாய்ப் போகும் என்கிறார்கள் அப்பகுதி மக்கள்...

கலெக்டர்: உடனடியாக அங்கே டவுன் பஸ் வர ஏற்பாடு செய்கிறேன்.

கல்கி: பலி கொடுக்கும் விஷயமெல்லாம் இப்போது முழுமையாகத் தடை செய்யப் பட்டு விட்டதா?

கலெக்டர்: இன்னும் அங்கங்கே நடந்து கொண்டுதான் இருக்கின்றன என்பதை மறுக்க முடியாது. அது மக்களின் மத உணர்வு சம்பந்தப்பட்ட விஷயம் என்பதால் தான் கடுமையான நடவடிக்கை எடுக்க முடியவில்லை என்பதை மனம் திறந்து ஒப்புக்கொள்



* பாதியில் நிற்கும் தருமபுரியிலுள்ள நீச்சல் குளம்

கிறேன். ஆனாலும் கொஞ்சம் கொஞ்சமாகத் தடை செய்து விட முடியும் என்றே நம்புகிறேன்.

கல்கி: டெங்கனிக் கோட்டை அருகிலுள்ள அஞ்செட்டி பகுதியில் சுமார் பத்தாயிரம் பேர்...

கலெக்டர்: (இடைமறித்து) ஊதுவத்திக்கான மூங்கில் குச்சி செய்யும் தொழிலைத் தானே குறிப்பிட வருகிறீர்கள். அது தொடர்பான முழு விஷயங்களும் எனக்குத் தெரியும். மீண்டும் அந்த மக்கள், கூட்டுறவு சங்கத்தின் மூலம் தங்கள் தொழிலைத் தொடருவதற்கான ஏற்பாடுகளைத் தீவிரமாகச் செய்து கொண்டிருக்கிறேன். விரைவில் அவர்கள் பிரச்னை தீர்க்கப்பட்டு விடும்.

கல்கி: காடுகளிலிருந்து சந்தனக் கடத்தலும், சமயங்களில் யானைகளைச் சுட்டுக் கொன்று தந்தங்களைக் கடத்துவதும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன என்று சொல்கிறார்களே?

கலெக்டர்: எப்போதாவது சில சமூக விரோதிகள் கடத்த முற்படுவது உண்மை தான். ஆனால் அவற்றைக் காட்டிலாகா அதிகாரிகள் கண்டுபிடித்துப் பறிமுதல் செய்து விடுகிறார்கள். யானைத் தந்தம் கடத்துவது என்பதெல்லாம் பொய்!

கல்கி: காட்டோரத்தில் வசிக்கும் மக்களே சொல்கிறார்கள்! எப்போதாவது இறந்து போன யானையைப் புதைப்பதற்குக் காட்டிலாகா அதிகாரிகள் இந்த மக்களைக் கூட்டிச் செல்வார்களாம். அதாவது யாரோ யானையைச் சுட்டுத் தந்தங்களை எடுத்துக் கொண்டு சென்ற பிறகு, இறந்த யானை பற்றி வெளியே தெரிந்தால் தங்களுக்கு அவமானம் என்பதால் காதும் காதும் வைத்தது போல் அவர்கள் யானையைப் புதைத்து விடுவதாகச் சொல்கிறார்கள்...

கலெக்டர்: விசாரிக்கிறேன். அப்படி நடக்குமானால் சம்பந்தப்பட்டவர்கள் மீது கண்டிப்பாக நடவடிக்கை எடுக்கப்படும்.

கல்கி: ஒசூரிலுள்ள காஸ் விநியோக ஏஜென்ஸி ஒன்று தமிழ்நாடு வீட்டு வசதி வாரிய வீட்டிலேயே காஸ் சிலிண்டர்களை

அடுக்கி வைத்திருக்கிறது. சட்டப்படி இப்படிச் செய்யக் கூடாது என்றாலும் அவர்கள் அரசியல் செல்வாக்கைக் காட்டி இப்படிச் செய்கிறார்களாம். அதோடு வெளிமார்க்கெட்டில் விற்கும் விலையை விட இருநூறு, முந்நூறு ரூபாய் கூடுதலாக வைத்து ஸ்டல் விற்பனை செய்து வருகிறார்களாம்.

கலெக்டர்: விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: ஒசூர் காவல் நிலையத்தில் கொடுக்கப்படும் புகார்களின் மேல் நடவடிக்கையே எடுக்கப்படுவதில்லை என்ற குறை மக்கள் மத்தியில் நிலவுகிறதே!

கலெக்டர்: பொதுப்படையாகச் சொன்னால் எப்படி? குறிப்பிட்டுச் சொல்ல வேண்டாமா?

கல்கி: இரண்டு, மூன்று வாரங்களுக்கு முன்பு ஒரு கொலை நடந்த போது கூட முதல் நாள் கொடுக்கப்பட்ட புகாருக்கு மறுநாள் காலையில்தான் சம்பவம் நடந்த இடத்திற்குப் போலீஸார் சென்றார்களாமே?

கலெக்டர்: விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: ஒசூர் ஒரு தொழிற்பேட்டையாக இருந்தும் கூட அங்குள்ள பஸ் நிலையம் படுமோசமாக இருக்கிறதே?

கலெக்டர்: அதை மேம்படுத்துவதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

கல்கி: கிருஷ்ணகிரியில் பஸ் ஸ்டாண்டு இருந்தும் கூட அங்கே பஸ்கள் போவதே இல்லை. ஏன்?

கலெக்டர்: இடநெருக்கடிதான் காரணம். இப்போது பெரிய அளவில் பஸ் ஸ்டாண்டு கட்டுவதற்கான திட்டம் ஒன்று இருக்கிறது. விரைவில் புது பஸ் ஸ்டாண்டு கட்டி முடிக்கப்பட்டுவிடும்.

கல்கி: பர்கூர் யூனியனில் உள்ள தாளா பள்ளம், கல்யாணகுண்டு நிலம், மலைய கவுண்டன் நிலம்... போன்ற ஆறேழு இடங்களில் உள்ள புறம்போக்கு நிலங்களைச் சுமார் நாற்பதாண்டுகளுக்குமேல் சாகுபடி செய்து கொண்டு வந்தும், இன்னும் தங்களுக்குப் பட்டா கொடுக்கப்படவில்லையென்று அந்த மக்கள் முறையிடுகிறார்களே, ஏன்?

கலெக்டர்: அவர்களில் பலருக்குப் பட்டா கொடுக்கப்பட்டு விட்டது. சிலருடைய நிலம் மட்டும் காட்டிலாகா சம்பந்தப்பட்டதாக இருப்பதால் தாமதமாகிறது. அதற்கும் இன்னும் சில மாதங்களில் பட்டா வழங்கப்பட்டுவிடும்!

கல்கி: ஒசூரிலிருந்தும்சரி, தருமபுரியிலிருந்தும் சரி பெங்களூர் செல்வதற்கு பஸ் வசதி இல்லை. அதற்குக் காரணம் முன்பு போக்குவரத்துத் துறை அமைச்சராக இருந்த பொன்னையன் ஒரே பதிவு எண்ணில் பல பஸ்களை பெங்களூருக்கு ஓட்டியதால்தான் இப்போது கர்நாடக அரசு தமிழக அரசின்மேல் நம்பிக்கை இழந்து, தமிழக பஸ்களுக்குப் பர்மிட் கொடுக்கத் தயங்குகிறது. அதனால்தான்



மானேஜிங் டைரக்டர் ஸ்டெனோவிடம்: கமிட்டி கூட்டத்தில் நான் பேசினதை நீங்க நோட்ஸ் எடுத்திருக்கறதைப் பார்த்தா ஒரே பேத்தலா இருக்கே.

ஸ்டெனோ: நீங்கதானே சார், கமிட்டி மெம்பர்ஸ் பேசறதை அப்படியே நோட்ஸ் எடுக்கணும்னு சொன்னீங்க.

— என். வெங்கட்ரமணி

ஓசூரிலிருந்தும், தருமபுரியிலிருந்தும் பஸ்களை விட முடியவில்லை என்கிறார்களே, உண்மையா?

கலெக்டர்: அதெல்லாம் சுத்தப் பொய். ஓசூரிலிருந்தும், தருமபுரியிலிருந்தும் அரசு பஸ்களை விடும்போது தனியார் பஸ்களின் வருமானம் பாதிக்கப்படுகிறதென்று அவர்கள் 'ஸ்டே' வாங்கியிருப்பதுதான் உண்மையான காரணம்.

கல்கி: முன்னாள் எம். எல். ஏ. அரங்கநாதனின் அட்டகாசம் தாங்க முடியாததாக இருக்கிறது என்று பொது மக்கள் முறையிடுகிறார்களே?

கலெக்டர்: நோ கமெண்ட்ஸ்! ப்ளீஸ்!

கல்கி: காலை, மாலை வேளைகளில் தருமபுரியில் மகளிர் ஸ்பெஷல் பஸ் விட்டால் வசதியாக இருக்குமென்று சொல்கிறார்களே?

கலெக்டர்: அதுபற்றி நாங்களும் யோசித்துக் கொண்டுதான் இருக்கிறோம். விரைவில் விடப்படும்.

கல்கி: ராயக்கோட்டையிலுள்ள அரசு உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் சீனிவாசன் சத்துணவுக்கென்று மாணவர்களிடமிருந்து மாதம் இரண்டு ரூபாய் வசூல் செய்கிறாராம். அதோடு டி. சி. போன்ற சர்ட்டிபிகேட் கொடுப்பதற்குக் கூட ஒவ்வொரு ரேட் வைத்துக் கொண்டு வசூலிப்பதாகப் புகார் சொல்கிறார்கள்!

கலெக்டர்: அவர்மேல் மாவட்டக் கல்வி அதிகாரி விசாரணை நடத்திக் கொண்டிருக்கிறார். விசாரணைக்குப் பிறகு நடவடிக்கை எடுக்கப்படும்.'

கல்கி: மலைவாழ் மக்கள் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் சித்தேரியில் மருந்தகம் அமைக்கப்பட்டிருக்கிறது. அங்கு டாக்டர்கள் போன்றவர்கள் தங்குவதற்கான குடியிருப்பு வசதிகள் இருந்தும் யாரும் தங்குவதில்லையே, ஏன்?

கலெக்டர்: எனக்கும் புகார்கள் வந்துள்ளன. நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

கல்கி: கோட்டப்பட்டி, ஆண்டியூர், வீரப்பநாயக்கன்பட்டி, காட்பாடி போன்ற பகுதிகளில் குடியிருக்கும் இருளர்கள் என்ற மலைவாழ் மக்களுக்கு இன்னும் வீட்டு மனைப் பட்டா கூடக் கொடுக்கப் படவில்லையாமே!

கலெக்டர்: ஆராய்ந்து ஆவன செய்கிறேன்.

கல்கி: இப்போது நக்ஸலைட் பிரச்னை எப்படியிருக்கிறது?

கலெக்டர்: படித்த இளைஞர்களுக்கும் மற்ற இளைஞர்களுக்கும் முடிந்த வரை வேலை வாய்ப்பு அல்லது சுய வேலை வாய்ப்புக்கான கடனுதவி போன்றவற்றை ஏற்படுத்திக் கொடுத்துக் கொண்டிருப்பதால் இப்போது அந்தப் பிரச்னை சுமுகமாக இருக்கிறது என்றே சொல்லலாம்.

கல்கி: நாங்கள் சில நக்ஸலைட்டுகளைச் சந்தித்த போது, அவர்கள் சும்மா இருந்தால் கூடப் போலீஸார் பொய் வழக்குகள் போட்டுக் கொடுமைப்படுத்துவதாகவும் அதனாலேயே பலர் விரக்தியடைந்து எதையும் செய்யும் மனோநிலைக்குத் தள்ளப்படுவதாகவும் சொன்னார்களே?

கலெக்டர்: அப்படியெல்லாம் பொய் வழக்குப் போடுவதில்லை.

கல்கி: இப்போது பல கேஸ்களில் சம்பந்தப்பட்டுத் தலைமறைவாகி இருப்பதாகச் சொல்லப்படும் நக்ஸலைட் தலைவர் சித்தானந்தத்தின் ஆறு வயதுக் குழந்தை பாவெல் மேல் பிச்சை எடுத்த குற்றத்திற்காக என்று ஒரு கேஸ், மற்றும் சட்டத்துக்குப் புறம்பான முறையில் பொது மக்களைத் தடுத்து நிறுத்தி, அச்சுறுத்தி, பணம் பறித்ததற்கான இ. பி. கோ. செக்ஷன்கள் 341, 506, 147 ஆகியவற்றின்மேல் கேஸ் போட்டிருப்பதாகச் சொல்கிறார்களே? ஆறு வயதுப் பையன் செய்யக்கூடிய குற்றங்களா இவை?

கலெக்டர்: பிச்சை எடுத்ததற்கான குற்றத்தின் அடிப்படையில் மட்டும்தான் கேஸ் போடப்பட்டிருக்கிறது. மற்ற செக்ஷன்களில் இல்லை.

கல்கி: மற்ற செக்ஷன்களிலும் கேஸ் இருக்கிறது என்றுதான் சொன்னார்கள்.

கலெக்டர்: எஸ். பி. யைக் கேட்கிறேன்.

கல்கி: கடைசியாக ஒன்று. நீங்களும் மற்ற உயர் அதிகாரிகளும் குடியிருக்கும் பகுதியிலேயே திருட்டுக்கள் நடக்கின்றன. அந்த அளவுக்குத் திருடர்கள் துணிச்சலாகத் திருடுகிறார்கள். என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?

கலெக்டர்: இப்போது தீவிரமான கண்காணிப்புக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்.

கல்கி: ரொம்பவும் நன்றி. இப்போது நாம் விவாதித்த விஷயங்கள் பற்றி நீங்கள் எடுத்த நடவடிக்கைகளைப் பிறகு எங்களுக்குத் தெரிவியுங்கள். அது நமது சந்திப்பின் பலனை வாசகர்கள் அறிந்து கொள்வதற்கு வசதியாய் இருக்கும்.

கலெக்டர்: அவசியம் தெரிவிக்கிறேன். இன்னும் சொல்லப் போனால் உங்கள் அறிவிப்பு வந்ததிலிருந்து உங்கள் வருகைக்காகவும், சந்திப்புக்காகவும் காத்திருந்தேன். ஆனால் எதிர்பாராத விதமாக நான் சென்னைக்குச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதால் உங்களை ஒருநாள் தாமதப்படுத்தி விட்டேன். அதற்காக வருந்துகிறேன். நன்றி.

# லேட்டஸ்ட் கிசு கிசு என்ன?

* ஆர். அரிகோபி, குடியாத்தம்.

? கட்சிக்குள்ளா ட்பூசல்கள்புகைந்துகொண் டிருக்கும் இந்த நேரத்தில் அ. தி. மு. க. வின் பத்தாண்டுச் சாதனை விழா தேவை தானா?

! விழாக்கள் கிளப்புகிற தூளில் உட்பூசல் புகையை மறைத்து விடலாம் என்பதற் காகத்தானே இத்தனை ஏற்பாடுகளும்!

* ஆர். அப்துல் சலாம், திருச்சி — 20.

? கால் இறுதிப் போட்டிவரை வந்து நம்மையெல்லாம் எதிர்பாராத விதத்தில், ரமேஷ் கிருஷ்ணன் ஏமாற்றி விட்டாரே?

! கால் இறுதிப் போட்டிக்கு மேலும் எதிர் பார்த்திருந்தது உங்கள் தவறு! அதற்கு ரமேஷ் கிருஷ்ணனை நோவானேன்?

* க. தியாகராசன், நெய்வேலி. *

? 'இரா. செழியன் நல்ல பார்லிமெண்டேரி யன். எனவேதான் அவரை ராஜ்யசபைத் தேர்தலில் ஆதரித்தோம்' எனச் சொல்லும் ப. உ. ச. கடந்த பொதுத் தேர்தலின் போது மட்டும் செழியனுக்கு எதிராக வைஜயந்தி மாலாவை நிறுத்திய இ. காங்கிரஸ் கட்சி யோடு கூட்டு வைத்துக் கொண்டதேன்?

! சபாஷ் நண்பரே! ப. உ. ச. வின் மூக்கை அப்படியே டணால் பண்ணிவிட்டீர்கள்!

* கே. ஆர். எஸ். ரமேஷ், சிங்காரப்பேட்டை.

? தமிழக மக்கள் ஏமாந்து கொண்டிருக் கிறார்களா இல்லை ஏமாற்றிக் கொண்டிருக் கிறார்களா?

! ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள் என் பதை உணராமல் ஏமாந்து கொண்டிருக் கிறார்கள்.

* ஆர். ஜி. சிவக்குமார், பழனி.

? சமீபத்தில் மிகவும் அதிர்ச்சியடைய வைத்த சம்பவம்?

! விசைத்தறி நெசவாளர் மாநாட்டுக் காகக் கடந்தவாரம் லாரியில் பயணம் செய்து வந்தவர்களில் பதினொரு பேர் விபத்துக்கு இரையாகிப் போன சோகம். லாரி என்பது சரக்குப் போக்குவரத்துக்கான வாகனமே தவிர ஜனங்கள் பயணம் செய்வதற்கான தல்ல. அப்படியிருக்கும் போதும் இதை யெல்லாம் அரசு கண்டு கொள்ளாமலிருக் கும் அநியாயத்தை என்னவென்று சொல் வது?



* புது பட்டம்!



* கால் இறுதி



*கெக்கெ!



* டணால்!

* கா. க. வேலாயுதன், கோவை — 16.

? மகாத்மா காந்திக்குப் பிறகு யாருக்கும் 'மகாத்மா' பட்டம் கொடுக்கப்படவில் லையே... இதுபற்றி யோசித்ததுண்டா?

! அடக் கடவுளே! உரக்கச் சொல்லிவிடாதீர்கள்; பத்தாண்டு சாதனைக்காக எம்.ஜி. ஆருக்குக் கொடுத்துவிடப் போகிறார்கள்!

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? யாருக்காவது வக்காலத்து வாங்கியதுண்டா?

! உண்டு. நியாயத்துக்கு.

* எச். கே. நாசர், தோப்புத்துறை.

? வெற்றிலை போடும் பழக்கம் உண்டா?

! உண்டு. ஆனால் எப்போதாவது! ஆடு தழை மேய்கிற மாதிரிக் கண்டபடி மடித்து வாயில் திணித்துக் கொள்கிற அவசரமெல்லாம் எனக்குப் பிடிக்காது. துளிர் வெற்றிலையைக் கையிலெடுத்து அதன் சில்லிப்பில் சிறிது லயித்து, கைச்சீவல்... அளவான சுண்ணாம்பு ஆகியவற்றோடு கொஞ்சம் வாசனைப் புகையிலையையும் சேர்த்து மெல்லுகிற சுகம், சங்கீதத்தை ரசிக்கிற அனுபவம்!

* சுமாலி, மேலப்பாளையூர்.

? திருவையாறில் திருட்டுப் போன டீ. வி. கேமரா ஒரு குளத்தில் கிடந்ததாமே?

! உலகக் கோப்பைக்கான கால் பந்து ஆட்டம், விம்பிள்டன், கிரிக்கெட் ஆகியவற்றின் டீ. வி. ஒளிபரப்பைப் பார்த்த லயிப்பில் இருக்கிறேன் நான். அதுவும் குறிப்பாக விம்பிள்டனில் ஒருநாள் திடீரென்று மழை பெய்ததால் இடையில் ஆட்டம் தடைப்பட்டுப் போகிறது. ஆனாலும் டீ. வி. கேமராக்கள் தங்கள் இயக்கத்தை நிறுத்திவிடவில்லை! திடீர் மழையின் காரணமாக ஒரே குடைக்குள் ஒட்டிக் கொண்டு நிற்கும் ஜோடிகளையும், மழை நின்றவுடன் அங்கங்கே சொட்டுச் சொட்டாக வடிந்து கொண்டிருந்த மழைத் துளிகளையும் காட்டிக் கவிதை படைத்தார்கள் என்றால், டென்னிஸ் கோர்ட் நனையாமலிருப்பதற்காகப் போடப்பட்ட குட்டையான டார்பாலின் டெண்ட்டின் இடைவெளி வழியாக, மறுமுனையில் அந்தப் பக்கமாக நடந்து போன ஒருவரின் கால்களை மட்டும் காட்டித் திகிலூட்டினார்கள். அடடா! அதுவல்லவோ கேமரா! அதுவல்லவோ டீ. வி.!! அதைப் பார்த்த சுகத்தில் லயித்திருக்கும் போதா நீங்கள் நம்ம ஊர் டீ. வி. கேமராவை ஞாபகப்படுத்தி வயிற்றெரிச்சலைக் கட்டிக் கொள்ள வேண்டும்? அது குளத்தில் கிடந்தால் என்ன? ஆற்றில் கிடந்தால் என்ன? அல்லது டீ. வி. நிலையத்திலிருந்தால்தான் என்ன? எல்லாம் ஒன்றுதான், விட்டுத் தள்ளுங்கள்!

* செல்வன்ஜி, திருச்சி — 17.

? பச்சை மை, பச்சைத் துரோகம் — பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! பச்சைத் துரோகம் செய்வதற்குப் பச்சை மையைத்தான் உபயோகிக்க வேண்டும் என்பதில்லை. இதை நான் சொல்லவில்லை; அந்த 'நான்கு' பேரே நிரூபித்திருக்கிறார்கள் ஸ்வாமி!

* அருவி மைந்தன், கோணபட்டு.

? உலகத்திலேயே மகத்தான சக்தி மனித சக்திதான் என்று விஞ்ஞானிகளே சொல்கிறார்கள். அரசாங்கமோ அதிகமான ஜனப் பெருக்கம்தான் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கும் வறுமைக்கும் காரணம் என்கிறது. எது நிஜம்?

! அளவுக்கு மீறிய மக்கள் தொகைப் பெருக்கம் என்பது கட்டுப்படுத்தப்பட வேண்டிய விஷயம்தான். ஆனால் மக்கள் தொகைப் பெருக்கம்தான் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கும் வறுமைக்கும் காரணம் என்று பிரசாரம் செய்வது மிகப் பெரிய மோசடி. நம்மை விட அதிக ஜனத்தொகையுள்ள சீனாவில் யாரும் பட்டினி கிடக்கவில்லையே! மனித சக்தியைப் பயன்படுத்திக் கொள்ளாத அரசாங்கத்தின் திட்டங்களில்தான் கோளாறு இருக்கிறது.

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? லேட்டஸ்ட் கிசுகிசு என்ன?

! நெல்லை, அருப்புக் கோட்டை இடைத் தேர்தலில் தி. மு. க. போட்டியிடாது என்று கலைஞர் சொல்லியிருப்பதெல்லாம் சும்மா ஒரு பேச்சுக்குத்தானாம். தி. மு. க. போட்டியிடுவதாகச் சொல்லிவிட்டால் ஆளும் கட்சியின் கைகளிலுள்ள அரசு இயந்திரம் இப்போதிருந்தே அந்தத் தொகுதிகளில் டேரா போட்டு இலவச வேட்டி, சட்டை, சேலை... என்று தொகுதி ஒவ்வொன்றையும் சொர்க்கபுரியாக்கிவிட மாட்டார்களா? அதற்காகத்தான் இப்போது போட்டியிடப் போவதில்லை என்று சொல்லிக் கொண்டிருந்துவிட்டுக் கடைசி நேரத்தில் ஒரு கொரில்லாத் தாக்குதல் மாதிரி போட்டியிட்டு திணறடிக்கப் போகிறதாம் தி. மு. க.! போதுமா கிசுகிசு!

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

ச. தியாகராஜன்,
எம் 152/2, மந்தாரக்குப்பம் காலனி,
நெய்வேலி — 607 802.

# பத்தாவதாக ஒரு யோசனை!

* '628'ன் புத்தம் புதிய ஐடியாக்களில் பத்தாவதாக இதைச் சேர்க்கவும்:

''இக்குறிப்புக்களைப் படித்தவுடன் நறநறவென்று கோபத்தில் பற்களைக் கடிக்க வேண்டாம். பல்தான் உடையும். அதற்குப் பதில் 'கேரட்'டைக் கடித்தால் பல் வலுவடையும்.''

கோவை, உமார்த்தி.

* ஜெயமன்மதன் ''ஆக்ரி ராஸ்தா'' படத்தை விமர்சித்ததைவிட பாக்யராஜைத்தான் அதிகம் பாராட்டியது போல் தோன்றுகிறது.

கரூர், என். செல்வராஜ்.

* கிரிக்கெட்டில் பெற்ற வெற்றியைத் தலையங்கத்தில் பாராட்டியிருக்கும் ஒரே பத்திரிகை எங்கள் கல்கி தான். சபாஷ்!

சாத்தூர், கபில் முத்துக்குமார்.

* 'இடைவெளி இல்லாத சந்தோஷங்கள்' கசந்துவிடும் என கோமகன் கூறியதற்கேற்ப இருபது டெஸ்டுகளுக்குப் பின் இங்கிலாந்துக்கு எதிராக இந்தியா பெற்ற வெற்றி உமக்குச் சந்தோஷத்தைக் கொடுத்தது மட்டுமில்லாமல் உம்மை சபாஷ் போட வைத்ததும் பொருத்தம்தான்.

குடியாத்தம் — 2, கே. வி. எஸ். மணியன்.

* கார்ட்டூனில் பத்தாண்டு ஆட்சி சாதனை நினைவுக் கம்பங்களுக்குப் பொருத்தமான எட்டுப் பெயர்கள் தான் சூட்டப்பட்டுள்ளன. எஞ்சிய இரண்டுக்கும் 'விநோதமான அறிக்கைகள்' 'விபரீதமான நடவடிக்கைகள்' என்று பெயரிட்டால் என்ன?

தஞ்சாவூர், அ. சம்பத்.

* விறுவிறுப்பான தலைப்புகளை அளித்துப் பரபரப்பூட்டிய கல்கியில் ''நாய்களுக்கு 400 வார்த்தை தெரியும்'' போன்ற விஷயங்கள் தேவைதானு சார்?

சிங்காரப் பேட்டை, மோகன சங்கர்.

* மனிதனையே மனிதன் மதிக்காத நிலைமை உருவாகிவிட்ட இன்றைய உலகில், நாய்களை மிகுந்த அன்புடன் வளர்க்கும் அந்த மனிதர் மனத்தை நெகிழ வைக்கிறுர்!

சாலிகிராமம், எஸ். சம்பத்குமார்.

* தனது பெயரும் தீவிரவாதிகளிடம் உள்ள கொலை செய்யப்பட வேண்டியவர்களின் பட்டியலில் இடம் பெற்றிருந்தும், பஞ்சாப் பிரச்னையில் பெரிதும் அக்கறை காட்டி வரும் பாரதீய ஜனதாக் கட்சியின் தலைவர் அத்வானியின் நெஞ்சுறுதி போற்றுதற்குரியது.

தோட்டக்குறிச்சி, இரா. வேலாயபதி.

* 'எய்ட்ஸ்' நோயின் பயங்கரக் கொடுமைகளைப் பற்றி பல புதிய தகவல்களை நீங்கள் கொடுத்திருந்த போதிலும், அந்நோயைப் பற்றிய பீதி சற்றுக் குறைந்திருக்கும் நேரத்தில், மீண்டும் அதைப் பற்றிக் கிளப்பி விட வேண்டுமா என்றே கேட்கத் தோன்றியது.

அரூர், மு. மதிவாணன்.

* ''உங்கள் குழந்தை கூடக் கடத்தப்படலாம்'' என்ற கட்டுரை, பெற்றோர்களுக்கு, அதுவும் பள்ளிகள் திறக்கும் சமயத்தில், மிகவும் உபயோகமானது.

கொப்பம்பட்டி, செ. அன்பு மதியழகன்.

* 'உங்கள் குழந்தைகூட கடத்தப்படலாம்'' கட்டுரையைக் 'கல்கி'யில் படித்த பிறகு, எங்கள் ஊர்ப் பெற்றோர்கள் தம்குழந்தைகளைப் பள்ளிக்குக்கொண்டு விடுவதும், அழைத்து வருவதுமாக இருக்கிறார்கள்.

குத்தாலம், உஷா மாலதி.

* காசிலிங்கத்தின் கதி என்ன? என்பதை அறிய, படபடப்புடன் பக்கங்களைப் புரட்டினேன். உயிர் பிழைத்துவிட்டார் என்ற செய்தியைப் படித்ததும் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன்.

பழனி, ஜடாயுப்ரியா.

## இப்போது சுத்தமானது!

* கடந்த 18.5.86 கல்கி இதழில் பூம்புகாரின் குறைகளைச் சுட்டிக் காட்டி இருந்தீர்கள். இதன் பயனாய்ச் சிலம்பு வடிவ தங்கும் விடுதியைச் சுற்றி உள்ள இடங்களும், இலஞ்சி மன்றத்திற்கு அருகில் உள்ள பகுதிகளும், தற்போது சுற்றுலா அதிகாரியால் சுத்தம் செய்யப்பட்டு ''இங்கே அசுத்தம் செய்யாதீர்கள்; தண்டனை பெறுவீர்கள்'' என்ற அறிவிப்புப் பலகையும் வைக்கப்பட்டுள்ளது.

பூம்புகார், ஆர். சங்கரன்.

ரவீந்திரநாத் தாகூரை இழிவாகப் பேசினான் அந்தப் பள்ளித் தோழன்: "அப்படியென்ன பிரமாத கவி? பெரிய இடத்துப் பிள்ளை! அதனால்தான் நோபல் பரிசு கிடைத்துவிட்டது!" என்றான்.

அவ்வளவுதான்! அடக்க முடியாத கோபம் வந்துவிட்டது மாணவன் நஜ்ருலுக்கு. அந்தப் பையன் மயக்கமடையுமளவுக்கு ஒரு மூங்கில் தடியால் மண்டையிலடித்துவிட்டான்!

பல ஆண்டுகளுக்குப் பிறகு நஜ்ருல் கவியாகப் புகழ் பெற்று ஹூக்ளியில் வாழ்ந்த காலத்தில் அவருடைய பள்ளித் தோழர் அவரைச் சந்தித்து, "நீ அன்றைக்கு அடித்த அடி இன்னும் என் நெற்றியில் திலகம் மாதிரி இருக்கிறது!" என்று தழும்பைக் காட்டினார்!

இந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு நஜ்ருல் எழுதுகிறார்: "என்னுடைய ரவீந்திர பக்தி ரவீந்திர விரோதி ஒருவனின் நெற்றியில் அழியாத தழும்பாகித்" திகழ்கிறது!"

ஒருநாள் "சௌகாத்" பத்திரிகை அலுவலகத்தில் ஆசிரியர் முகமது நசீருத்தீனின் புத்தக அலமாரியை வெகு நேரம் குடைந்து பார்த்துவிட்டு நஜ்ருல் சொன்னார்: "குப்பையைக் கிளறினால் மாணிக்கம் கிடைக்கும்னு சொல்வாங்க; இங்கே மாணிக்கத்தைக் காணோம்; குப்பை மட்டும்தான் இருக்கிறது!"

நசீருத்தீனுக்கு நஜ்ருலின் பேச்சுப் புரியவில்லை. அவர் விழிப்பதைப் பார்த்துவிட்டு, புத்தக அலமாரியில் தாகூரின் நூல் ஒன்றுகூட இல்லை என்பதைச் சுட்டிக் காட்டினார் நஜ்ருல்!

இவ்வாறு ரவீந்திர ரசிகனாக மட்டுமின்றி ரவீந்திர பக்தனாகவே விளங்கினார் நஜ்ருல். அவரைப் பற்றி 'நஜ்ருல் என்றொரு மானிடன்' என்று நூல் எழுதியிருக்கிறார் க. கிருஷ்ணமூர்த்தி. (வானதி பதிப்பகம், சென்னை — 17), இப்புத்தகத்துக்கு 1984ல் இலக்கிய சிந்தனை பரிசு கிடைத்தது. அது மட்டுமல்ல, மேற்கு வங்க அரசின் 1986ம் ஆண்டுக்கான ரவீந்திரர் நினைவுப் பரிசையும் பெற்றுள்ளது! பரிசுத் தொகை ரூ 10,000.

நஜ்ருல் விடுதலைப் போராட்ட காலத்தில் அரசியல் கைதியாகி கல்கத்தா அலிப்பூர் மத்திய சிறையில் அடைத்து வைக்கப்பட்டார். அப்போது அவர் நண்பர் ஒருவர் ஒரு புத்தகத்துடன் அவரைக் காண வந்தார். ஆங்கிலேயக் காவல் அதிகாரி என்ன விஷயமென்று வினவ, 'நஜ்ருலுக்குத் தமது ஒரு புத்தகத்தைத் தாகூர் சமர்ப்பணம் செய்திருக்கிறார். அதைக் கொடுத்துவிட்டுப் போக வந்தேன்' என்றார் நண்பர். 'சமர்ப்பணம் செய்திருக்கிறாரா? என்ன உளறுகிறாய்? புத்தகத்தைப் பரிசாக அனுப்பியிருக்கிறார் என்று சொல்லு' என்றான் ஆங்கிலேயன். 'இல்லை, இல்லை! நான் சரியாகத்தான் சொல்கிறேன்' என்று நண்பர் கூறவும் ஆங்கிலேய அதிகாரி வியப்பில் வாய் பிளந்தார்: 'இந்தக் கைதி நஜ்ருல் அவ்வளவு பெரிய மனிதரா!'

அனுமதி கிடைக்கவே நஜ்ருல் ஆனந்தக் கூத்தாடி அந்தப் புத்தகத்தைக் கையில் வாங்கிப் பார்த்தார். அதன் முதல் பக்கத்தில் பின்வருமாறு அச்சிடப்பட்டிருந்தது:

"சமர்ப்பணம் —
அன்புக்குரிய கவி
ஸ்ரீமான் நஜ்ருல் இஸ்லாம் அவர்களுக்கு."

கீழே மையில் ரவீந்திரரின் கையெழுத்து!

நஜ்ருலின் கண்கள் பனித்தன. தாகூரிடம் கவி விருது பெற்றபோது நஜ்ருல் இஸ்லாமின் வயது இருபத்து மூன்று!

தொகுப்பு:
— வைதேகி

# அடி கொண்டு தாக்கிய தாகூர் பக்தி!





க. கிருஷ்ணமூர்த்தி

# தகிடுதத்தம்!




சென்ற ஆண்டு மத்தியில் படித்த வேலையில்லாத பட்டதாரிகள் என்று சொல்லிக் கொண்டு இரண்டு, மூன்று இளைஞர்கள் ஒசூரின் ஒவ்வொரு காலனியாய்ப் போய் "நாங்கள் சொந்த முயற்சியால் ஒரு தவணை முறைத் திட்டம் துவக்கியிருக்கிறோம்" என்றார்கள். அதன்படி, டீ.வி., ரேடியோ, ஃபேன், கிரைண்டர் என்று பல பொருள்களைத் தவணை முறையில் சீட்டுக் கட்டி வாங்கும் எண்ணத்தில் பல பெண்கள் இத்திட்டத்தில் சேர்ந்தார்கள். கிருஷ்ணகிரி விலாசத்துடன் பாஸ்புக் அட்டையும் ரசீதும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. பிறகு மாதா மாதம் ஒசூர் வந்து தவணைப் பணம் வாங்கிச் செல்வார்கள். இந்த வருஷம் ஜனவரியில் ஒருவரும் பணம் வாங்கிச் செல்ல வரவில்லை. கிருஷ்ணகிரியில் விசாரித்த போது, அப்படி ஒரு நிறுவனமே இல்லை என்பது தெரிய வந்தது!

இப்படி ஏமாற்றுகிற பேர்வழிகள் கிருஷ்ணகிரியில் மட்டுமா? பல ஊர்களிலும் அவ்வப்போது தலையெடுக்கிறார்கள். அவர்கள் மீது மட்டும் குற்றமில்லை; எளிதில் ஏமாறத் தயாராக இருப்பவர்களும் குற்றவாளிகள்தான்!

★★★★★★★★★★★★★★★★

** எதைப் பாராட்டுவது என்று எண்ணித் தவித்த போது, தருமபுரி பஸ் ஸ்டாண்ட்தான் ஞாபகத்திற்கு வருகிறது. ஊருக்கு மத்தியில் இருந்தாலும் விசாலமான பஸ் ஸ்டாண்ட். பஸ்கள் ஒன்றையொன்று முத்தமிட்டுக் கொள்ளாமல் 'பாம்' 'பாம்' என்று ஹாரன்கள் இல்லாமல், பஸ்கள் வரிசையாக நின்று ஒழுங்காக நேரத்துக்குப் புறப்பட்டுச் செல்கின்றன. அண்ணா (போக்குவரத்துக் கழக) நாமம் வாழ்க!



• சோமயாஜுலுவுடன் டாக்டர் ரகுராமி ரெட்டி

# தோடியா? சங்கராபரணமா?

சிலுக்கு, ஜெயமாலினி நடனங்களையும், டிஷ்யூம் சண்டைகளையும் கொண்ட மசாலாப் படங்களுக்கிடையில் நமது சிறப்பு மிக்க சாஸ்திரிய இசை, நடனக் கலைகளுக்கு முக்கியத்துவம் தந்து படமெடுக்க முன்வந்துள்ள இன்னொருவர் ஏ. ரகுராமி ரெட்டி. படத்தின் பெயர்: "ஆனந்த தாண்டவம்."

ரகுராமி ரெட்டி ஒரு டாக்டர். நெல்லூரில் டாக்டராகத் தொழில் நடத்தும்போதே சில பழைய பனை ஓலைகள் இவர் கைகளுக்குப் பல கை மாறி எப்படியோ வந்து சேர்ந்ததாம். அவற்றை ஆராய்ச்சி செய்யப் போக, அதில் கனக சபை நடனம் பற்றிய விவரங்கள் இருந்தனவாம். டாக்டர் ரகுராமிக்கு ஏற்கெனவே நடனக் கலையில் ஈடுபாடு உண்டு. இந்த ஓலைச் சுவடிகள் அவர் ஆர்வத்தைப் பலமடங்காகத் தூண்டிவிட்டு விட்டன. விளைவு: அந்த ஓலைச் சுவடியில் கண்ட முப்பத்தாறு வகை நடனங்களையும் வைத்துத் திரைப்படமெடுக்கத் தீர்மானித்தார். அதற்காக ஒரு கதையும் பின்னினார். ஜீவாத்மா—பரமாத்மாவாக சக்தி—சிவனைச் சித்திரிப்பதற்காகவே ராதா—மாதவா என்ற மானுடக் கதாபாத்திரங்களை சிருஷ்டித்தார். ஒரு மாமாங்க காலம் பாடுபட்டுப் படம் எடுத்து வருகிறார்! இதில் ஐந்து வருஷம் கலை ஆராய்ச்சி, சிந்தனை, கதை—வசனம் முதலியவற்றுக்குப் போய்விட்டது. ஏழு

ஆண்டுகள் படப்பிடிப்பு நடந்திருக்கிறது!

படத்தில் நடனமே பிரதானம். நடனக் காட்சிகளைப் படம் பிடிக்க மட்டும் மூன்று வருஷங்கள் ஆயிற்று. மூன்று காமிராக்கள் இயங்கின. கலாக்ஷேத்ரா மாணவி சவிதா—இவர் கலை ஆர்வத்துக்குத் தலைவணங்கி நடித்திருக்கிறார். ஆஸ்திரேலியப் பெண்மணி மர்ரேயும் நடித்திருக்கிறார்.

நடனத்தை அடையாறு லட்சுமணன் இயக்கியுள்ளார். இசைக் கலைஞர்களான எல். வைத்தியநாதன், ரமணி, ரவிகிரன் முதலியோர் உதவியுள்ளனர். 82 ராகங்கள் ஒலிக்கின்றன.

தமிழ், தெலுங்கு, ஹிந்தி ஆகிய மூன்று மொழிகளிலும் படத்தை எடுத்திருக்கிறார் ரகுராமி. மேல்நாடுகளுக்கு வீடியோ எடுத்து



சவிதா

அனுப்பவும் உத்தேசம்.

இனி முக்கியமான கேள்வி: படம் சங்கராபரணமாக வெற்றி பெறுமா அல்லது தோடியாகத் தோல்வியுறுமா? "நல்ல வருவாய் அளித்துக்கொண்டிருக்கும் டாக்டர் தொழில் இருக்க, ஏன் இப்படி 'ரிஸ்க்' எடுத்தீர்கள்?" என்றால், "அது என் லட்சியம்; படம் வசூலில் வெற்றி பெறுகிறதோ இல்லையோ, மக்களை நிச்சயம் கெடுக்காது! அந்தத் திருப்தி எனக்குப் போதும்" என்கிறார் அதிசய மனிதர் ரகுராமி!

— சிக்கி





"இதென்னடி உன்னோட கல்யாணம் நடப்பதற்கு முன்னாலேயே சம்பந்திச் சண்டை?"

"பந்த் நடக்கிற நாளில்தான் முகூர்த்தம் வச்சுக்கணும்ங்கிறார் என் அப்பா. கூடாது என்கிறார் என் வருங்கால மாமனார்!"



"மாயாலோகம் என்று நான் எடுத்த படத்தின் நெகடிவ், எங்கேயோ மாயமாய் மறைந்துவிட்டது சார்!"



"தூக்கத்திலே பாமா! ஈஸ்வரி! என்றெல்லாம் உளறுகிறீர்களே! யார் அந்த பாமாவும் ஈஸ்வரியும்?"

"பாமா விலாஸ்; ஈஸ்வரி லஞ்ச் ஹோம்!"

ஜெகஜீவன்ராம்:



# தாழ்த்தப்பட்டோரின் தனிப்பெரும் தலைவர்

* அம்பேத்காருக்குப் பிறகு இந்தியா முழுவதும் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தனிப் பெரும் தலைவராக இருந்தவர் ஜெகஜீவன்ராம்தான்.

* ஆங்கிலத்திலும் இந்தியிலும் பிரமாதமாகப் பேசக் கூடியவர்.

* பங்களாதேஷ் யுத்தத்தின்போது நமது ஜவான்களுக்கு இவர் கொடுத்த செய்தி மிகப் பிரபலமானது. அசோக சாம்ராஜ்யத்துடன் இந்தியாவை ஒப்பிட்டு, "அசோகர் வாளைக் கீழே போட்டுவிட்டு, தர்மத்தையும் அன்பையும் உபதேசிக்கக் கிளம்பினாலும் கூட, 'என் நாட்டுக்கு ஆபத்து என்று வரும் வேளையில் வாளைத் தூக்கத் தயங்க மாட்டேன்' என்று கூறினார். அதுபோலத்தான், சமாதானத்தையும், உலக அமைதியையும் விரும்புகிறது இந்தியா. ஆனால் இந்தியாவுக்கு ஆபத்து என்றால் நாம் சும்மா இருக்க முடியாது" என்றுபேசிய ஜெகஜீவன்ராமின் இந்தப் பேச்சினை அந்தக் காலகட்டத்தில் பள்ளிகளில் பிள்ளைகள்கூட பேச்சுப் போட்டியின்போது உபயோகித்துக்கொண்டனர்.

* மதம் மாறிச் சென்றால்தான் தாழ்த்தப்பட்டவர்களுக்கு விமோசனம் என்று அம்பேத்கார் புத்த மதத்துக்குச் சென்றார். ஆனால் ஜெகஜீவனோ 'கடைசிவரை இந்து மதத்தில் இருந்து கொண்டே போராடுவேனே தவிர, மதம் மாற மாட்டேன்' என்று உறுதியாகக் கூறி வந்தார்.

* 'தூசி' என்றால் ஜெகஜீவனுக்கு அலர்ஜி

* ஒருமுறை பம்பாயில் கார்ட்டூனிஸ்ட் ஆர்.கே. லக்ஷ்மன் இரண்டு நிமிடங்களில் அவரைப் படம் போட்டுக் காண்பித்தார். கார்ட்டூனிஸ்ட்டுகள் படம் போட விரும்பும் பிரபல மனிதர்களில் இவரும் ஒருவர்.

* பனகல் பார்க்கில் 1980ல் நடந்த தேர்தல் பிரசாரத்தின்போது எம்.ஜி.ஆர்., 'ஒரு தாழ்த்தப்பட்ட தலைவர் இந்தியாவின் பிரதமராக வரவேண்டும்' என்று ஜெகஜீவனைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு பேசினார். ஆனால் ஜனதா ஆட்சியின் நெருக்கடியான காலகட்டத்தில் ஜெகஜீவனுக்கு ஆதரவு கொடுக்காமல், சரண்சிங்குக்கு ஆதரவு கொடுத்து அவரைப் பிரதமராக்க உதவினார் எம்.ஜி.ஆர். ஜெகஜீவன் தமிழகத்துக்கு வரும் போதெல்லாம் இந்த விஷயத்தை மறக்காமல் சொல்லுவார்.

* எமர்ஜென்ஸி தீர்மானத்தைப் பாராளுமன்றத்தில் கொண்டு வந்தபோது அதை முன்மொழிந்து பேசியவர் ஜெகஜீவன்ராம் தான் என்பதால் அவரை ஒரு சந்தர்ப்பவாதி என்று பலர் கூறுவர். ஆனால் "ஒரு பொறுப்பான பதவியில் இருந்தால்தானே மக்களின் உரிமைகளைக் காப்பாற்றும் சக்தி எனக்கிருக்கும்? அதனால் எனது மெய்யான எண்ணங்களை உள்ளுக்குள் புதைத்துக் கொண்டேன்" என்று ஜெகஜீவன்ராம் தமக்கு நெருங்கியவர்களிடம் கூறியிருக்கிறார். இதற்கு நிரூபணமாகப் பின்னால் இவர் இந்திரா காங்கிரஸிலிருந்து விலகி ஜனதாவில் சேர்ந்ததைச் சொல்லலாம் என்றாலும் அதையும் சந்தர்ப்ப அரசியலாகக் கூறுகிறவர்கள் உண்டு. இவர்கள் காங்கிரஸ் (ஜெ) ஆரம்பிக்கப்பட்டதையும் அவ்வாறே விமர்சிப்பார்கள். இவற்றைக் காலத்தின் கட்டாயம் என்று பேசுவோரும் இருக்கிறார்கள்.

* திண்டுக்கல்லில் ஒரு பொதுக் கூட்டம். கூட்டத்திற்குப் போகும்முன்னர் ஜெகஜீவன்ராமிடம், தாழ்த்தப்பட்ட மக்கள் தமிழகத்தில் எவ்வாறெல்லாம் தாக்கப்படுகிறார்கள் என்பதைச் சிலர் கூறினார்கள். இதனால் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுப்போய் கூட்டத்தில் பேசும்போது 'தாழ்த்தப்பட்ட மக்கள் தாக்குதல்களிலிருந்து தப்பிக்க ஆளுக்கொரு கத்தி வைத்துக் கொள்ள வேண்டும்' என்று பேசிவிட்டார். பின்னால் சில தலைவர்கள், 'என்ன இப்படிப் பேசிவிட்டீர்களே?' என்று கேட்ட போது, 'ஏதோ வேகத்தில் பேசிவிட்டேன்' என்று மிகவும் மனம் வருந்தினார்.

* மத்திய அரசின் பல்வேறு துறைகளில் இந்தி மறைமுகமாகத் திணிக்கப்படுவதைத் தமிழகத் தலைவர்கள் பலர் சுட்டிக்காட்டிய போது, 'நான் பதவியில் இருக்கும்வரை இந்தி பேசாத பகுதி மக்களுக்கு நேரு கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவேன்' என்று உறுதி கூறியிருக்கிறார் ஜெகஜீவன்.

— கௌசல்யா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

புதிய
மேம்படுத்தப்பட்ட

# கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ்

## சில பெண்களுக்கு இது தேவை.



இது மிக நீளமான நேப்கின் | இது மிக அகலமான நேப்கின் | இது மிக தடிப்பான நேப்கின்

கூடுதலான பெரிய சைஸிலே தாமுள்ள நேப்கினின் சுகமும் பாதுகாப்பும் தேவைப்படும் பெண்களுக்கு—இதோ ! புதிய கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ்.

நீளத்தினேயும், அகலத்தினேயும், தடிப்புத் தன்மையினேயும் கூடுதலாகவே பெற்றிருக்கும் இந்த நேப்கினின் நாலிழைகள் உறிஞ்சும் திறன் அதிகமாகப் பெற்று மிகுந்த நம்பிக்கையைத் தருகிறது.

ஒண்டர்ராப் உறைகள் ஈரத்தை உள் அடுக்கிற்குள் செலுத்துவதால் ஈரம் சீராக உறிஞ்சப்பட்டு உலர்வினேயும் சுகத்தினேயும் உங்களுக்குத் தருகிறது. நாப்கினின் இந்த சிறப்பான டாப்-நுனிகள் சரியாகப் பொருந்த உதவுவதோடு கச்சிதமாகவும் இருக்கிறது.

இப்போது கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜில் ஒரு சிறப்பான (ஈரம் கசியாத) 3 வழி நீலநிற ப்ளாஸ்டிக்-ஷீல்டு—அடிப்புறம் அணைப்புக்கொடுத்து பக்கங்களோடு மேற்புறம் வரை பரவியமைகிறது. படத்தில் நீங்கள் காண்பதுபோல, இவ்வகையில் உங்களுக்கு அதிகப் பாதுகாப்பு, அதிக பத்திரத் தன்மை.

புதிய கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ்—முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு கூடுதலான பெரிய சைஸில்.

தேர்ந்தெடுத்த நகரங்களில் மட்டுமே கிடைக்கிறது.







OBM6784/TM

தனியாகவும் கிடைப்பவை: கேர்:ப்ரீ ரெகுலர் 10'கள், 20'கள், 30'கள் அடங்கிய பேக்குகள்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்





குழந்தைகளுக்கான அமுல்ஸ்ப்ரே
பாலுணவு இப்போது நருவிசான
புதிய டிசைனிலே வருகிறது*

ஸ்ப்ரே-ட்ரை செய்முறைப்படி தயாரிக்கப்பட்டு, வைட்டமின்களும் இரும்புச் சத்தும் சேர்த்து வளமூட்டப்பட்ட அமுல்ஸ்ப்ரே, இந்தியாவில் எங்குமுள்ள தாய்மார்களால் மிகவும் விரும்பப்படும் குழந்தைப் பாலுணவு—உங்கள் குழந்தைக்கு அமுல்ஸ்ப்ரே துவங்கு முன்பாக உங்கள் டாக்டரிடமோ அல்லது ஆரோக்கிய நலம் காக்கும் ஊழியரிடமோ ஆலோசனை கேட்டுப் பெறுங்கள். மறவாதீர்கள், உங்கள் பாப்பாவின் உடல் நலம் கெடாதிருக்க, டின் மீதுள்ள வழிமுறைக் குறிப்புகளைக் கவனமாகப் பின்பற்றுங்கள்.

# அமுல்ஸ்ப்ரே

குழந்தைக்குத் தாய்ப்பால் தான் சிறந்தது.





* அரசாங்க விதிமுறைகளின்படி, டின் மீதிருந்து பாப்பாவின் படம் அகற்றப்பட்டு, வழிமுறைக் குறிப்புகளில் இதர மாற்றங்களும் செய்யப்பட்டுள்ளன.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

